4 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

பதிவு எண்: எம். 8798.

கதிர் 10] மதுரை 19-12-72 செவ்வாய் | சுடர் 297

## வியட்நாம் அமைதிக்கு அமெரிக்கா முட்டுக்கட்டை

பாரிஸ், டிச. 18—

வியட்நாமில் அமைதி ஏற்படுத்துவது குறித்து, அமெரிக்காவுக்கும் வட வியட்நாமுக்குமிடையே நடைபெற்றுவரும் சமாதானப் பேச்சுவார்த்தையில் மீண்டும் அமெரிக்கா முட்டுக்கட்டை ஏற்படுத்தியுள்ளது. கொள்கைப் பிரச்னை உட்பட பல முக்கிய விஷயங்களில் மாற்றம் செய்யவேண்டும் என்று அமெரிக்கா சண்டித்தனம் பண்ணுகிறது என வடவியட்நாம் பிரதிநிதிகள் குற்றம சாட்டினர். கிஸிங்கர்-"தோ" ரகசியப் பேச்சுவார்த்தையை பகிரங்கப்படுத்துவதில்லை என்ற உடன்பாட்டையும் அமெரிக்கா மீறிவிட்டது என்றும் வடவியட்நாம் பிரதிநிதிகள் குற்றம்சாட்டினர்.

## ஆந்திர காங்கிரஸ் குழப்பம்

விஜயவாடா, டிச. 17—

முல்கி விதிகள் சம்பந்தமான பிரச்னையில் ஜனநாயக ரீதியான தீர்ப்பை காங்கிரஸ் கட்சியால் உண்டாக்க முடியாமல் புதிய புதிய சிக்கல்கள் தோற்றுவிக்கப்படுகின்றன.

ஆந்திரபிரதேச மாநிலத்தையே இரண்டு மாநிலங்களாகப் பிரிக்கவேண்டும் என்று ஆந்திர பகுதியைச் சேர்ந்த 73 காங்கிரஸ் எம் எல் ஏக்களும், 19 எம்.எல்.சிகளும், ஒரு எம். பி. யும், 9 ஜில்லா பரிஷத் தலைவர்களும் கலந்து கொண்ட கூட்டத்தில் தீர்மானிக்சப்பட்டதாக அறிவிக்கப்படுகிறது.

8 அமைச்சர்கள் ராஜினமா கடிதங்களையும் அனுப்பியுள்ளனர்.

### கேரளத்தில்

# விவசாயத் தொழிலாளர்கள் மீது போலீஸ் தடியடி துப்பாக்கிச் சூடு 25 பேர் காயம்

**கண்ணனூர், டிச. 16 —**

**கண்ணனூர் மாவட்டத்தில் ஓர்ளாயி திருத்தியில் உள்ள ஒரு நிலச்சுவான்தாருக்குச் சொந்தமான உபரி நிலத்தில் பிரவேசித்து குடிசைகள் கட்டியிருந்த நிலமற்ற ஏழைகள் மீது போலீசார் துப்பாக்கிச் சூடும் தடியடிப்பிரயோகமும் நடத்தினர். தடியடியினல் 25 பேர் காயமடைந்தனர்.**

போலீசின் இந்த அடக்குமுறை சம்பவம் சென்ற 14-ம்தேதியன்று நடைபெற்றது.

ஏழை விவசாயத் தொழிலாளர்களின் போராட்டத்தை அடக்குவதற்காக இண்டிகேட்—வலது கம்யூனிஸ்ட் அரசின் அடக்குமுறை நடவடிக்கையானது உச்சக்கட்டத்திற்குச் செல்ல முதலடி எடுத்து வைத்து விட்டது என்பதையே இந்த போலீஸ் துப்பாக்கிச் சூடு சம்பவம் உணர்த்துகிறது.

சம்பவத்தன்றுபலதோழர்களை போலீசார் கைது செய்தனர்.

### சி. ஆர். பி. போலீஸ் அடக்குமுறை

தோட்டத்காடு உபரி நிலத்தில் குடிசைகள் கட்டிய 16 தோழர்களை 14-ம் தேதியன்று ஒரு போலீஸ் சப்,இன்ஸ்பெக்டர் தலைமையில் மத்திய ரிசர்வ் போலீசார் (சி. ஆர். பி.) வெறித்தனமாகத் தாக்கினர்.

### பட்டினி போட்டனர்

அம்பலம்பாறை பஞ்சாயத்தில் உள்ள ஒரு உபரி நில மீட்புப் போராட்டத்தில் கலந்து கொண்டு குடிசைகள் கட்டியவர்களை போலீசார் கைது செய்தனர்.

இந்தத்தோழர்களை போலீசார் கைது செய்தது மட்டுமல்லாமல், இவர்களைக் கோட்டில் ஆஜர்படுத்தாமல் ஒரு நாள் முழுதும் உணவு கொடுககாமல் காவலில் வைத்துப் பட்டினி போட்டு வதைதனர்.

கோட்டமலையில், 12-ம் தேதியன்று 200 ஏக்கருள்ள ஒரு உபரி நிலத்தில் 6 குடிசைகள் கட்டப்பட்டன. கொடியத்தூரில் உள்ள உபரி நிலத்தில் 14-ம் தேதியன்று 5 குடிசைகள் கட்டப்பட்டன.

பெருவந்தானம் டி. ஆர். ஆன்ட்ரு கம்பெனிக்குச் சொந்தமான ஒரு உபரி நிலத்தில் 14-ம் தேதியன்று 6 பேர் பிரவேசித்து குடிசைகள் கட்டி, விவசாய வேலைகளையும் துவக்கினர்.

### எம் எல் ஏ. க்கள் உண்ணுவிரதம்

சுருளி கீரித்தோடு பிரதேசத்தில் குடியிருப்பு அகற்றப்பட்டவாகள் அங்கு புதிய போராட்டம் துவங்கியிருபபதற்கு ஆதரவாகவும, அவர்கள மீது போலீஸ் நடததும் அடக்குமுறைச் செயலகளுக்கு எதிராகவும் இடுக்கி மாவடடத்தில்சடடமனற எதிாக்கட்சி உறுப்பினர்கள் கடந்த 11ம் தேதி முதல் 48 மணிநேர உணணுவிரதப் போராட்டம் நடததினர்.

சட்ட மவற எதிர்க்கட்சி உறுப்பினர்களான, ஏ. ஸி. சாககோ, கே. ஏ. ராஜன, ஜி. வரதன், ஆகியோருடைய தலைமையிலும், பி.யூ. தேவஸ்யம, எம்.ஸி. தாமஸ, ஆகியோருடைய தலைமையலும 48 மணி நேர உணணுவிரதப் போராடடம நடநது முடிந்தது.

உண்ணுவிரதம் ஆரம்பிப்பதறகு முனனதாக, குத்திப்பாறைத தடம, முழவடி, கீரித்தோடு. சுருளி, பாதிப்பாலம் ஆகிய இடங்களில் இருநது ஆயிரககணக்கான விவசாயிகள பாத யாததிரையாகவந்து கீரித்தோடில ஒன்றுசேர்நது அங்கு ஒரு பிரமமாணடமான ஆர்ப்பாட்ட ஊாவலம நடத்தினா. தங்களுக்கு உபரிநிலங்கள் வழஙகவேண்டுமென்றும் குடிசைகளைப பியததெறியும போலீஸ் அடக்குமுறையைக் கண்டனம் செய்துய முழக்கங்கள எழுப்பிச்சென்றனர்.

ஆர்ப்பாட்டத்தையொட்டி அனறு தோழா ஜி. வரதன தலைமையில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. அதில சட்டமன்ற உறுபபினர்களான கே. எம். ஜார்ஜ், கே. ஏ. ராஜன், ஆகியோரும். பி. யூ. தேவஸ்யம, எம். ஜீனதேவன ஆகியோரும் பேசினர்.

## காங்கிரஸ் மாநாட்டுக்கு மக்கள் வரிப்பணம்

கல்கத்தா, டிச. 18—

இந்திரா காங்கிரஸ் கட்சியின் 74-வது மாநாட்டை இங்கு நடத்துவதற்காக, கல்கத்தா நகரின் கிழக்குப் பகுதியில் ஒரு புதிய நகரம் நிர்மாணிக்கப்பட்டு வருகிறது.

அரசாங்கத்தின் செலவில், தண்ணீருக்குள் மூழ்கிக் கிடக்கும 130 ஏக்கர் பகுதியை செப்பனிட்டு இந்த நகரம் நிர்மாணிக்கப்பட்டுவருகிறதாம்.

காங்கிரஸ் மாநாட்டுக்காக அரசாங்கத்தின் செலவில் 200 குழாய் கிணறுகள் அவசர அவசரமாக அமைக்கபபட்டு வருகின்றனவாம்.

மாநில மின்சார இலாகா. இந்த மாநாட்டுக்காக ஒரு மின் நிலையத்தையும் அமைக்கின்றனர்.

சிறப்பு விருந்தினர்கள் குடியிருப்பதற்காக 100 வீடுகளை பொது மராமத்து இலாகாவினர் கட்டி வருகின்றனர்.

பிரதம மந்திரி இந்திரா காந்தி தங்குவதற்காக கட்டப்பட்டு வரும் விருந்தினர் மாளிகை (கெஸ்ட் ஹவுஸ்) கம்பீரமாக இருக்குமென்று தெரிகிறது.

மேற்கு வங்காள மக்கள் வகுத்துவரும் குடிசைகள் போன்று, நிர்மாணிக்கபபட்டுவரும இந்தப பிருமாண்டமான கட்டிடம் வைக்கோலால் வேயப்பட்டிருக்கும் நெருப்பு பற்றுத வகையில் இந்த வைக்கோல் கூரையின்மீது தகுந்த இரசாயனப பொருட்கள் தூவப்பட்டிருக்கும்.

இந்த "வைக்கோல் குடிசை" முழுவதும் குளுகுளு (ஏர்கண்டிசன், வசதிசெய்யப்பட்டிருக்கும.

வரும் பிரதிநிதிகள் தங்குவதற்காக ரூ. 40 லட்சம் செலவாகும் என்று மதிபபிடப்பட்டுளளது

பொருடகாட்சி அமைக்கப்படவிருக்கும் மைதானத்தில் நூற்றுக்கு மேற்பட்ட ஸ்டால்கள் நிறுவப்பட்டுவிட்டன. இந்தப் பொருட்காட்சி அரங்கை அழகுபடுத்தும் பணியில் மேற்கு வங்க அரசின் 30 இலாக்கள் இரவு பகலாக பயன்படுததபபட்டு வருகின்றனவாம்.

இந்த மாநாட்டைச் சிறப்பாக நடத்துவதற்காக பல கோடி ரூபாய்கள் செலவு செய்யததிட்டமிடப்பட்டுள்ளது. இத்தொகையில் பெரும பகுதி மககளிடமிருந்து மேற்கு வங்க அரசு வசூலிதது வரும் வரிப்பணமாம்.

### உணவு தானிய ...

(8-ம் பத்தித் தொடர்ச்சி)

கையில் கூறியுள்ளார். நிலச்சீர்திருத்தச் சட்டங்கள் குலைக்கப்பட்டு வருவதையும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

### எச்சரிக்கை

விவசாயிகளும். விவசாயத் தொழிலாளர்களும் வெகுவேகமாக ஓட்டாண்டியாகி வருகிரர்சள் என்றும் இந்த நிலைமையில் அவர்கள் அடிபணிந்து போக மாட்டார்கள் என்றும் கோனூர் எச்சரித்துள்ளார்.

சமீபகாலத்தில் நாடெங்கும் தோன்றிய விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் போராட்டங்களையும் குறிப்பாக நிவாரணம் கோரியும், நிலச்சீர் திருத்தம் கோரியும் நில வெளியேற்றத்தை எதிர்த்தும் கேரளம், மேற்கு வங்கம், தமிழ்நாடு, ஆந்திரம் போன்ற மாநிலங்களில் நடைபெற்ற போராட்டங்களையும் அவர் தம்முடைய அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

## உணவு தானிய மொத்த வியாபாரத்தை அரசு ஏற்கவேண்டும்

# அ. இ. விவசாயிகள் சங்கத்தின் அறைகூவல்

**விஜயவாடா, டிச. 71 —**

**உணவு தானிய மொத்த வியாபாரத்தை அரசே மேற்கொள்ள வேண்டும் என்றும், நிலப் பிரபுக்களிடமுள்ள எல்லா உபரி தானியங்களையும் கட்டாயக் கொள்முதல் செய்து நியாய விலைக் கடைகள் மூலம் நபர் ஒன்றுக்கு நாள் ஒன்றுக்கு அரை கிலோ தானியம் வீதம் வினியோகம் செய்ய வேண்டும் என்றும் அகில இந்திய விவசாயிகள் சங்கம் கோரியுள்ளது.**

அ. இ. விவசாயிகள் சங்கத்தின் மத்திய கவுன்சில் கூட்டம் கோதாவரி மாவட்டத்திலுள்ள பாலகொல்லு என்ற இடத்தில் நடைபெற்றபோது இந்த முடிவு எடுக்கப்பட்டது. கவுன்சிலின் மூன்று நாள் கூட்டம் சடந்த வெள்ளிக்கிழமையன்று முடிவடைந்தது.

கூட்டத்துக்கு அ. இ. விவசாயிகள் சங்கத்தலைவர் தோழர் ஏ. கே. கோபாலன் தலைமை வகித்தார்.

ஆந்திர மாநில விவசாயிகள் சங்கத் தலைவர் யூ. ராமன் பிரதிநிதிகளை வரவேற்ருர்,

### கோரிக்கைகள்

நாட்டின் தற்போதைய வறட்சி நிலைமையைக் கருதி ஆயிரம் பேருக்கு ஒரு பங்கீட்டுக் கடை வீதம் திறக்கவேணடும் என்றும், பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரண வேலை அளிக்க வேண்டும அல்லது குடும்பம் ஒன்றுக்கு நாள் ஒன்றுக்கு குறைந்த பட்சம் 1 கிலோ அரிசி வீசம் இலவசமாகச் சப்ளை செய்யவேண்டும் என்றும், மாட்டுத் தீவனம் அளிகக வேண்டும் என்றும் மேலும் நீர்பபாசன வேலைகளை அபிவிருத்தி செய்யவும் விரிவு படுத்தவும வேண்டும் எனறும கூட்டத்தில கோரிக்கை எழுப்பப்பட்டது.

### கூலிநிர்ணயம்

அன்றாடம் வேலை செய்யும் விவசாயத் தொழிலாளர்களுக்கு ரூ 5 குறைந்தபட்ச காட்கூலி நிர்ணயம் செய்யப்படவேண்டும் என்றும் பண்ணையாட்களுக்கு ரூ. 150 மாதச் சம்பளம நிர்ணயிப்பதுடன் வருடத்துக்கு சம்பளத்துடன் 30 விடுமுறை நாட்கள் அளிக்க வேண்டும் என்றும் வேலையில்லாத தொழிலாளர்களுக்கு அரசு வேலை கொடுக்கவேண்டும் என்றும் கவுன்சில் கூட்டம் தீர்மானம் இயற்றியுள்ளது.

### நிலவெளியேற்றத்தைத் தடுக்க

விரிந்த அளவில் நில வெளியேற்றம் செய்யப்படுவது சம்பந்தமாகவும் தீர்மானம் இயற்றப்பட்டுள்ளது எல்லா நில வெளியேற்றங்களையும் தடை செய்யும் முறையில் அரசு அவசரச் சட்டம் பிறப்பிக்க வேண்டும் என்றும் விவசாயிகள் மீது போலீஸ் தாக்குதலை நிறுத்த வேண்டும் என்றும் அத்தீர்மானம் கோருகிறது.

நில வெளியேற்றத்தை எதிர்த்து விவசாயிகள் ஒன்றுபட்டு நின்று போராட வேண்டும் என்றும் அத்தீர்மானம் அறைகூவல் விடுத்துள்ளது.

### கோனூர் அறிக்கை

கூட்டத்தில் அ. இ. விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் அரிகிருஷ்ணக் கோனூர் அறிக்கை சமர்ப்பித்தார்.

உபயோகப் பொருள்களின் விலைகள் உயர்ந்து கொண்டே போகும் போது விவசாயிகள் உற்பத்திப் பொருள்களுக்கு நியாய விலை மறுக்கப்பட்டிருப்பதை அந்த அறிக்கை சுட்டிக் காட்டியுள்ளது.

நாட்டின் பெரும்பகுதிகளில் வறட்சி நிலைமை தோன்றியிருக்கும்போதும், பட்டினிச் சாவுகள் பற்றி தகவல்கள் வந்து கொடிருக்கும்போதும் இந்த நிலைமையைச் சமாளிக்க அரசாங்கம் எடுத்துள்ள நடவடிக்கை போதுமானதல்ல என்று அந்த அறிக்கை கூறுகிறது.

போதிய பாசன நீர்சப்ளையின்மையும்—உரம் கிடைக்காமலிருப்பதும் விவசாய உற்பத்தியைப் பாதித்துள்ளது என்றும் பொதுமக்கள் மீது வரிச்சுமை ஏறிக் கொண்டிருக்கிறது என்றும் அரிகிருஷ்ணக்கோனூர் தன்னுடைய அறிக்

(4-ம் பத்தி பார்க்க)

## இந்திரா காங்கிரஸ்-முஸ்லிம் லீக் உறவுக்கு எதிர்ப்பு

### உறவை முறிக்கக்கோரி லீக் அணியினர் கையெழுத்து இயக்கம்

கோழிக்கோடு, டிச. 17—

இந்திரா காங்கிரஸ் கட்சியுடனுள்ள தொடர்பை முறிததுக்கொள்வது பற்றியும. கேரள அமைச்சரவையிலிருந்து வெளியேறுவது பற்றியும் முஸ்லிம லீக தலைமை பரிசீலித்து வருவதாகத் தெரியவருகிறது. இதுபற்றிய ஒரு முடிவு வருமென்றும எதிர்பார்க்கபபடுகிறது.

முஸ்லிம் லீகின் தலைமை இதுபற்றி ஆழமாகப் பரிசீலிதது வருவதாகவு, மஞ்சேரிநாடாளுமன்ற இடைததேர்தலில் வேட்பாளராகப் போட்டியிடவிருக்கும சி. எச். முகமமது கோயாவை அமைச்சரவையிலிருந்து ராஜினமாச் செய்வதுடன, அமைச்சர் அவுதா குட்டி நகாவையும், சபாநாயகர் பாபளஹாஜியையும் ராஜினமாச் செய்யவைப்பதென றும், காங்கிரஸ் கட்சியுடனுள்ள தொடர்புகளை இத்துடன் அறுத்துக்கொள்ளலாமெனறும முஸ்லிம் லீகின பிரபல தலைவர் ஒருவர் "தேசாபிமானி" நிருபரிடம் கூறியுள்ளார்.

காங்கிரஸ் கட்சியுடனான உறவுகளை முறித்துக் கொளள வேணடுமெனறு முஸ்லிம் லீக் அணிகள் தங்கள் தலைமையை,வற்புறுத்தி வருகின்றன. இதற்கான கையெழுதது இயககத்தையும அணிகள் தொடங்கியுள்ளன.

### காங்கிரஸ் உறுப்பினரின் மோசடி

அண்மையில் நடைபெற்ற கோழிக்கோடு மாநகராட்சித தேர்தலில் முஸ்லிம் லீக் தோல்வியடைவதறகு முக்கிய காரணம, இந்திரா காங்கிரசின் துரோகமேயாகும் என்று முஸ்லிம் லீக்கின கீழ் அணிகள் உறுதியாக நம்புகின்றன. மேயா தேர்தலில் முஸ்லிம் லீக் வேட்பாளருக்கு 21 ஓட்டுகள் கிடைத்திருகக வேண்டும் ஆனல் அவருக்குக் கிடைத்ததோ சம ஓட்டுகளே.

காங்கிரஸ் உறுப்பினர்களில ஒருவர் தனது ஓட்டைச் செல்லாத தாககிவிடடதாக லீக் அணியினர் குற்றம சாட்டுகின்றனர்.

### பதவி வெறி

காங்கிரசுடன் உள்ள உறவுகளைத் துண்டித்து அதிகாரததிலிருந்து வெளியேற வேண்டும் எனறு கீழ் அணிகள் வற்புறுததும் அதே நேரததில், பதவி வெறி பிடித்த சிலர், தொடர்ந்து எபபடியும் அதிகாரத்தில் இருகக வேண்டும் என்று விரும்புகினறனர்.

## ஐ. டி. ஐ. ஆசிரியர்கள் உரிமைப் போர்

மதுரை, டிச. 18—

தமிழகத்தில் உள்ள தொழிற்பயிற்சிப் பள்ளி ஆசிரியர்களின் (ஐ. டி. ஐ. போதகர்கள்) உள்ளிருப்பு வேலை நிறுத்தம் கடந்த 14 நாட்களாக தொடர்ந்து நடந்து வருகிறது.

தங்களது தகுதி, வேலை நேரம், வேலை தரத்தின் அடிப்படையில் ஊதிய விகிதங்களை மாற்றியமைத்தல் முதலிய கோரிக்கைகளை வலியுறுத்தி, உள்ளிருப்பு வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டு வருகின்றனர்.

மாநிலத்தில் உள்ள மொத்தம் 31 ஐ. டி.ஐ.களில் பணி புரியும் சுமார் 1300 ஆசிரியர்களும் ஒன்றுபட்டு, இந்தக்கோரிக்கைகளுக்காக வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

இதற்கு முன்னல் தங்களது இந்த நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்றும்படி பல்வேறு இயக்கங்களை நடத்தினர்.

### இயக்கங்கள்

இவ்வாண்டு செப். 18.ம் தேதி முதல் 23-ம் தேதி வரை கோரிக்கைகளடங்கிய கறுப்பு அட்டைகள் அணிந்து அந்தந்த ஐ. டி. ஐ.கள் முனபு கோரிக்கை ஆர்ப்பாட்டம் செய்தனர். செப். 26-ம் தேதி ஆசிரியர்கள் அனைவரும் ஒட்டு மொத்தமாக சிறு விடுப்பு (மாஸ்கேஸ்வல் லீவு) இயககம் நடத்தினர். அக். 1-ம் தேதி திருச்சியில் சங்கப் பேரவை கூட்டி கோரிக்கைகளை அரசுக்கு அறிவித்தனர்.

அக் 4-ந்தேதிகோவையில் நடந்த ஐ. டி. ஐ. முதல்வர்கள் மாநாட்டிற்கு ஒவ்வொரு முதல்வருக்கும் தந்திகள் அனுப்பி தெரியப்படுததினர். அக் 20-ந் தேதி தோழமை சங்கத் தலைவர்களை அழைத்து கோரிக்கை விளக்கக் கூட்டங்கள் நடத்தினர்.

### உள்ளிருப்பு வேலைநிறுத்தம்

இவ்வளவு இயக்கங்கள் நடத்தியும் அரசாங்கம் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. எனவே, நவ 11-ந் தேதி சென்னை அனைத்துக் கட்சித் தலைவர்கள், தோழமைச் சங்கத் தலைவர்கள் கலந்து கொண்ட கோரிக்கை மாநாட்டை நடத்தி அதில் நவ 20 முதல் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் (ரூல் டவுண், பென் டவுண், சால்க் டவுண்) தொடங்குவது என்று முடிவு செய்தவுடன், இலாகாஇயக்குநர் ஐ. டி. ஐ. ஆசிரியர் சங்கத் தலைவர்களை அணுகினர். போராட்டதை தள்ளி வைக்கும்படியும் அதற்குள் கோரிககைகளை ஆவன செய்ய ஏற்பாடு செய்வதாகவும் கூறினர்.

அதன் டிச. 5ந் தேதிக்கு போராட்டம் ஒத்திவைக்கப்பட்டது கோரிக்கைகள் குறித்து இலாகாவோ, அரசோ எவ்விதநடவடிக்கையும் எடுக்காமல்வாய்மூடி மௌனியாக இருந்ததால் திட்டமிட்ட முறைப்படி டிச. 5 முதல் உள்ளிருப்பு வேலை நிறுத்தம வெற்றிகரமாக நடந்துவருகிறது.

சில கல்லூரிகளின் முதல்வர்களும. அரசும், அதிகாரிகளும் அச்சுறுத்தல் முயற்சிகளில் இறங்கிய போதிலும்—ஊதியத்தை நிறுத்துவோம், முக்கிய ஊழியர்களைப் பழிவாங்குவோம் என்று பயமுறுததிய போதிலும்—கோரிக்கை நிறைவேறும் வரை தொடர்ந்து போராட்டம் நடத்துவது என்று சென்னை முதல் குமரிவரையுள்ள அனைத்து ஐ டி. ஐ. ஆசிரியர்களும் உறுதி பூண்டு ஒற்றுமையுடன் செயல்பட்டு வருகின்றனர்.

ஆசிரியர்களது கோரிக்கைகளை நிறைவேற்றும்படி மாநில அரசை வலியுறுத்தி பல இடங்களில் ஐ. டி. ஐ. மாணவர்களும் ஆதரவு ஆர்ப்பாட்டங்கள் நடத்தி வருகின்றனர்.

### என்.ஜி.ஓ. சங்கம் ஆதரவு

ஐ டி. ஐ. ஆசிரியர்களின் போராடடத்தை ஆதரித்து மாநில என். ஜி. ஓ. சங்கத் துணைத் தலைவர் திரு ஜே. எஸ். பரதன் அறிக்கையொன்று வெளியிட்டுள்ளார்.

அதில் கூறப்பட்டிருப்பதாவது:—

போராட்டத்தை முறியடிக்க ஊழியர்களின் ஊதியத்தை நிறுத்தவும கிளை நிர்வாகிகளையும் மாநில நிர்வாகிகளையும தற்காலிகமாக பதவி நீக்கம் செய்யவும் இலாகா தலைமை முன் வந்துள்ளது. இது போன்று பழிவாங்கும எந்த நடவடிக்கைகளையும், போதகர்களின் பக்கம் நின்று என். ஜி. ஓ. சங்கம் முறியடிக்கும் என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன். தமிழக அரசின் அலட்சிய போக்கிற்கு கண்டனம் தெரிவிப்பதுடன் தலையிட்டு கோரிக்கைகளை நிறைவேற்ற வேண்டும் எனக் கேட்டுக் கொள்ளுகிறேன். இவ்வாறு மாநில என். ஜி. ஓ. துணைத் தலைவர் ஜே. எஸ். பரதன் அறிவித்துள்ளார்.

## விசாரணை கமிஷன் அமைக்க முதலமைச்சர் மறுப்பு

லக்னோ, டிச. 15—

உ. பி. அமைச்சர்கள சிலர் மீது கூறப்பட்ட குற்றச்சாட்டுகள் பற்றி விசாரிக்க விசாரணைக் கமிஷன் அமைக்க வேண்டும் எனற கோரிக்கையை முதலமைச்சர் ஏற்க மறுத்ததையடுத்து உ. பி. சட்ட மன்றத்திலிருந்து எதிர் கட்சி உறுப்பினாகள் அனைவரும் வெளி நடப்புச் செய்தனர்.

மாநிலத்தைக் கொள்ளையடிப்பதாக அரசாங்கத்தின் மீது சரண்சிங் கடுமையான தாக்குதல் தொடுத்தார்.

விசாரணைக் கமிஷன் அமைக்க முடியாது என்றும், வேண்டுமானல் எதிர் கட்சிகள் நம்பிக்கை இல்லாத் தீர்மானம் கொண்டு வரலாம் என்றும் முதலமைச்சர் திரிபாதி கூறினர்.

இதில் காங்கிரஸ் எம் எல். ஏ.க்களே பிரதம மந்திரியிடம் உ. பி. அமைச்சாகளுக்கு எதிராக மனுக் கொடுத்திருப்பதையும் திரிபாதி ஒபபுக்கொண்டார்.

எனினும் 1974-ல் மக்கள் தான் தீர்ப்புகொடுக்க வேண்டும் என்றும் அவர் கூறினர்.

# தீக்கதிர்

## கொள்முதல் திட்டமும் மாநில அரசுகள் அலட்சியமும்

உணவுப் பொருள்களின் விலை தொடர்ந்து பயங்கரமாக உயர்ந்துகொண்டிருக்கிறது.

"பாகிஸ்தான் யுத்தத்தின் விளைவே இந்தவிலையேற்றம்" என்று பிரதம மந்திரி இந்திரா காந்தி இதற்கு விளக்கம் கொடுத்தார். அந்த விளக்கத்தை காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்களே ஏற்று கொள்ளவில்லை

யுத்தம் முடிந்து பல மாதங்கள் ஆனபின்னர் விலைகள் திடீரென செங்குத்தாக உயர்ந்திருப்பதற்குக் காரணம் அரசாங்கத்தின் கையாலாகாத்தனமே என்று காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே கடுமையான விமர்சனம் எழுந்தது. இந்தப் பின்னணியில்தான் ஆமதாபாத்தில் கூடிய அ. இ. கா. க. கூட்டத்தில் கோதுமை அரிசி ஆகியவற்றின் மொத்தவியாபாரத்தை அரசேமேற்கொள்ள வேண்டும் என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதிலும் அத்தியாவசியப் பொருள்களை மக்களுக்கு மலிவான விலையில் தாராளமாகக் கிடைக்கச் செய்வதிலும் காங்கிரஸ் கட்சிக்கும், அரசாங்கத்துக்கும் அக்கரை இருந்திருக்குமானால் என்ன செய்திருப்பார்கள் ?

நிலப் பிரபுக்களிடமும், பெரியநிலச்சுவான்தார்களிடமும் உள்ள உபரிதானியங்களைக் கட்டாயக்கொள்முதல் செய்து மக்களுக்குவினியோகம்செய்யும்பொறுப்பை அரசு மேற்கொண்டிருக்கும். அந்த நடவடிக்கையை எடுப்பதற்குத்தான் மத்திய அரசும், மாநில அரசுகளும் தயாராக இல்லை.

இந்நிலையில்தான் அ. இ கா. க. கூட்டத்துக்குப் பின் முதலமைச்சர்கள் மாநாட்டைக் கூட்டி போதிய அளவு உணவு தானியங்களைக் கொள்முதல் செய்ய வேண்டியதின் அவசியத்தை உபதேசித்துவிட்டு, மத்திய அமைச்சர்கள் தங்கள் பொறுப்பைத் தட்டிக்கழித்து விட்டார்கள்.

ஆமதாபாத் காங்கிரஸ் மகாநாட்டிலும், முதலமைச்சர்கள் மாநாட்டிலும் தீர்மானம் இயற்றப்பட்ட போதிலும் அதை மாநில அரசுகள் நிறைவேற்ற தயாராக இல்லை. குஜராத், மைசூர் போன்ற மாநில சட்ட மன்றங்களில் இதுபற்றி கடுமையான சர்ச்சைகள் மூண்டன.

மேற்கு வங்கம், அசாம், பீகார், உ. பி., தமிழ்நாடு, ராஜஸ்தான், குஜராத், பஞ்சாப் ஆகிய மாநில அரசுகள் உணவு தானிய மொத்த வியாபாரத்தை மேற்கொள்ளுவதிலுள்ள கஷ்டங்களைப் பற்றி விளக்கியதாக இப்போது மத்திய விவசாய அமைச்சர் பக்ருதீன் அலி அகமதே அறிக்கை விட்டுள்ளார்.

அரசாங்கமே தானிய வியாபாரத்தை மேற்கொள்ளுவதின் மூலம் இந்த வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கும் எண்ணற்றபேருக்கு வேலை போய்விடும் என்று மாநில உணவு அமைச்சர்கள் சாக்குப் போக்கு கூறுகின்றனர்.

வறட்சி நிலைமையைக் காட்டி குஜராத் அரசு கொள்முதல் செய்யும் பொறுப்பைத் தட்டிக்கழிக்க முயன்றுள்ளது.

தமிழ்நாட்டில் தற்போது ஏற்பட்டிருக்கும் வெள்ளத்தைக் காட்டி தமிழக அரசு தன் பொறுப்பைத் தட்டிக் கழிக்க முயன்றுள்ளது.

மத்திய அமைச்சர் சுட்டிக்காட்டியிருப்பது போல் 21 ஆயிரம் ஏக்கர் நிலமே தண்ணீர் மூழ்கியிருக்கும்போது கொள்முதல் திட்டத்தைக் தட்டிக்கழிப்பதற்கு இந்த நிலைமையைப் பயன்படுத்தித்தொள்ள தமிழக உணவு அமைச்சர் திரு. ப. உ. சண்முகமும் முயன்றுள்ளார்.

இந்நிலைமையில் கொள்முதல் திட்டத்தில் மாநில அரசுகள் உற்சாகம் காட்டாதிருப்பதை உணவு அமைச்சர்கள் மாநாடு பிரதிபலித்துள்ளதில் வியப்பேதுமில்லை.

விலை ஏற்றத்தினால் மக்கள் எவ்வளவு கஷ்ட நஷ்டதுக்குள்ளானாலும் மத்திய, மாநில அரசுகள் கிஞ்சிற்றும் கவலைப்படவில்லை என்பதை எந்த உருப்படியான நடவடிக்கையும் எடுக்காமல் வெறும் கூட்டம் கூடி கலையும் நிலைமை மீண்டும் மீண்டும் தெளிவு படுத்தியுள்ளது.

---

## சர்க்கார் உணவு தான்யக் கிடங்கில்....

(8-ம் பத்தித் தொடர்ச்சி)

ஏற்பட்டதாக கூறி இந்த மழையின் காரணத்தை உபயோகித்துக் கொண்டு சர்க்காரின் இருப்பு நெல் மூட்டையில் பெருத்த நஷ்டத்தைக்காட்டி ஊழல்செய்யப்பட்டு பலலட்ச ரூபாயை ஏப்பமவிட செய்யும் தில்லுமுல்லுகள் என இங்கு பரவலாக பொதுமக்கள் பேசிக் கொள்கிறார்கள்.

13, 14-ந் தேதிகளில் போர்டு மெம்பரும் மாவட்ட ஆட்சி தலைவரும் வந்து விசாரித்து போனதாக தெரிய வருகிறது. எனவே இது சம்பந்தமாக பகிரங்க விசாரணை நடத்தி உண்மையை கண்டு பிடிக்க தீவிர நடவடிக்கை எடுக்கும்படி கேட்டுக் கொள்கின்றேன்.

---

# இந்திய டெலிபோன்கள் சீர்கெட்டது ஏன்?

## சிலி நாட்டு தலைவரை எதிர்க்கும் சி.ஐ.ஏ.யும், ஐ.டி.டி.யுமே காரணம்

### மாநிலங்கள் அவைக் கூட்டத்தில் தோழர் கே. பி. சுப்பிரமணியமேனன் உரை

புதுடெல்லி, டிச. 15—

**சி ஐ. ஏ. என்ற அமெரிக்க உளவாளி ஸ்தாபனமானது, இந்திய நாட்டின் அரசியலை ஆட்டிப்படைக்கவும் மற்றும் பல்வேறு துறைகளிலும் புகுந்து தொல்லைகளைக் கொடுக்கவும் முனைந்திருக்கிறது.**

**அதுமட்டுமல்ல. நமது நாட்டின் பொதுத்துறைத் தொழில்கள் வளர முடியாதபடி தடுக்கவும், குறிப்பாக இரும்பு, உருக்கு ஆலைகள் ஏற்படாவண்ணம் வழிமறிச்சான் வேலைகள் செய்து நமது நாட்டின் பொருளாதாரத்தையே சீர்குலைத்திட, இந்த உளவு ஸ்தாபனம் எவ்வாறு எல்லாம் வேலை செய்கிறது என்பதை, ராஜ்யசபையில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் உறுப்பினர் தோழர் கே. பி. சுப்பிரமணியமேனன் அம்பலப்படுத்தினர். அவர் பேச்சின் விபரமாவது: —**

சி. ஐ. ஏ. யின் உளவு நடவடிக்கைகள் எவ்வாறு இருக்கின்றன என்பதைப்பற்றி இந்த நாட்டிலும் தெரியும். உலகின் வேறு பல நாடுகளிலும் தெரியும்.

### கவிழ்ப்பு வேலைகள்

அமெரிக்க உளவு ஸ்தாபனமானது, இந்தோனேஷியாவில் புகுந்து, ஜனாதிபதி சுகர்ணோவை எப்படித் தூக்கி எறிந்தது என்பதை உலகமே அறியும்.

இதைப்போன்றே, கம்போடியா நகரின் தலைநகரமான போனபென் நகரில் சி. ஐ. ஏ. புகுந்து கொண்டு, கம்போடிய பிரதமரான இளவரசர் சிகானூக் அவர்களைத் தூக்கி எறிய வேலை செய்தது.

சி. ஐ ஏ என்பது அமெரிக்க வெளிநாட்டுக் கொள்கையின் ஒரு கருவியே ஆகும். உலக நாடுகள் மீது அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் ஆதிக்கத்தை நிலைநாட்டும நவீன காலனிக் கொள்கையின கருவியாக விளங்குகிறது. இந்த நோக்கத்துககாக, அது எந்த இழிசெயலிலும் இறங்குகிறது. குழி பறிக்கிற வேலை, அரசியல் தலைவர்களைச் சுட்டுக்கொல்லுகிற வேலை, லஞ்சம் கொடுக்கிற வேலை, இன்னும் பல்வேறு ஊழல்கள் ஆகிய எல்லா இழி செயல்களிலும இறங்குகிறது.

### மரண ஆபத்து

இத்தனைக்கும் மேலே யாருடைய கண்ணுக்கும பகிரங்கமாகக் தெரியாமல் மிகமிக ஆபத்தான ஒரு வேலையை சி. ஐ ஏ. செய்து கொண்டிருக்கிறது, அது என்ன ?

அதுதான், பின்தங்கிய நாடுகளின் பொருளாதாரத்தையும், வளர்ந்துவரும நாடுகளின் பொருளாதாரத்தையும, குழிதோண்டிப் புதைக்கிற வேலை.

அதோ, லத்தீன் அமெரிக்க நாடுகளில் ஒன்றான சிலி நாட்டிலே, அதன குடியரசு தலைவர் தேர்வுக்குப் போட்டியிட்ட அலெண்டே அவர்களுக்கு எதிராக தீவிர நடவடிக்கைகளை சி. ஐ. ஏ. தான் முன்னின்று நடத்தியது. சர்வதேச டெலிபோன டெலிகிராப்(ஐ டி டி,) நிறுவனம என்றஉலகத்திலேயேமிகப் பெரிய அமெரிக்க கமபெனியுடன் சி. ஐ. ஏ. சேர்ந்து கொண்டு, அலெண்டேயின் வெற்றியைத தடுத்திடும் முயற்சியில் ஈடுபட்டதைப் பற்றி ஜாக் ஆண்டர்சன் என்பவர் அமபலப்படுத்தியுள்ளார்.

### அலெண்டேயை தடுத்திட படுமுயற்சி

இதோ, நியூஸ்வீக் பத்திரிகையில் வந்துள்ள செய்தியைப் பாருங்கள்!

"சிலி நாட்டிலே, 1970-ம் ஆண்டிலே நடந்த குடியரசு தலைவர் தேர்தலில், மார்க்சிஸ்ட் தலைவர் சால்வடார் அலெண்டே கோஸ்ஸென் அவர்கள் வெற்றிபெறாதபடிச் செய்ய, அமெரிக்க அதிகாரிகள் மூலமாக, இந்த ஐ டி. டி. கம்பெனி எவ்வளவோ இடையூறுகளைச் செய்தது" —என்று ஆண்டர்சன் குறிப்பிட்டிருப்பதாக எழுதியுள்ளது.

அமெரிக்க அரசாங்கமானது, எங்கெந்தநாடுகளிளெல்லாம் அமெரிக்க முதலாளிகள் முதலீடு செய்திருக்கிறார்களோ, அங்கெல்லாம் அவர்களுடன் சேர்ந்து கொண்டு, அந்த நாடுகளை நவீன முறையில் அடிமைப் படுத்த முனைந்துள்ளது. இதற்கெல்லாம் துணைபோவது சி. ஐ. ஏ. உளவு ஸ்தாபனம் தான்.

### பெங்களூர் டெலிபோன் ஆலை பாதிக்கப்பட்டது

நான் எதற்காக ஐ டி. டி. நிறுவனத்தைப்பற்றிக் குறிப்பிட்டேன் என்றால், இதே நிறுவனம்தான், நமது இந்திய நாட்டின் டெலிபோன் செய்திப் போக்குவரத்தில் நாம் தன்னிறைவு அடையாதபடிச் செய்து வருகிறது.

பெங்களூர் டெலிபோன் தொழிற்சாலையில் நூற்றுக்கு நூறு உற்பத்தி நடைபெறவில்லை. 40 சதமானம் தான் உற்பத்தி நடக்கிறது.

இதற்குக் காரணம் இந்த அமெரிக்க கம்பெனியான சர்வதேசடெலிகிராப் கம்பெனியின் கீழ் உள்ள பெல்ஜியம் பெல் டெலிபோன்கமபெனியுடன் நாம் கூட்டுச் சேர்ந்திருக்கிறோம்.

அந்த உடன்படிக்கையில் கண்டுள்ளபடி, இந்தக் கம்பெனி நடந்துகொள்ளவில்லை. அதனால்தான் முழு உற்பத்தியும் நடக்காமல் பெங்களூர் ஆலை தேக்கமுற்றுக் கிடக்கிறது இந்தத் தகவலை மத்திய மந்திரி பகுணாவே தெரிவித்தார்.

நமதுநாட்டிலே 70லட்சம் டெலிபோன் கனெக்ஷன்கள் வேண்டுமென மனுப் போட்டிருக்கிறார்கள்எல்லா மனுக்களும் தூங்குகின்றன.

காரணம் என்ன? இந்த அமெரிக்க தாச பெல்ஜியம் கம்பெனியானது, டெலிபோன் பொறிஇயல் சமபந்தமான பல விபரங்களை இன்னும நமக்கு கற்றுத் தரவில்லை.

உள்ள டெலிபோன்களும் குறைபாடுகளாகவே உள்ளன. இப்படித்தான் இருக்கவேண்டு மென்று சி. ஐ. ஏ. கூறிய யோசனைப் படிதான் நடந்து வருகின்றன. இதன் விளைவாக நமது டெலிபோன் தொழிற்சாலைக்கு ஏராளமான பொருள் நஷ்டம் உண்டாகிக் கொண்டிருக்கிறது.

இவ்வாறு நமது பொருளாதாரத்தைச் சீர்குலைப்பதிலேயே ஐ டி. டி. யும், சி. ஐ. ஏ. யும், அமெரிக்க அரசும் மாயமாக வேலை செய்து கொண்டிருக்கின்றன என்று குறிப்பிட்டார்.

---

## போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்து பார்லிமெண்ட் முன் ஆர்ப்பாட்டம்

### டெல்லி மாணவர்கள் முடிவு

புதுடெல்லி, டிச. 15—

போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்து 12-ந் தேதி பார்லிமெண்ட் முன்னால் நடத்துவதாக இருந்த ஆர்ப்பாட்டத்தை தள்ளி வைக்கடெல்லி பல்கலைகழக மாணவர்கள் சங்கம் முடிவு செய்துள்ளது.

கடந்த 6-ந் தேதியன்று தங்களது 7 அம்சக் கோரிக்கைகளை வலியுறுத்திடெல்லி பல்கலைக் கழக மாணவர்கள் பல்கலைக் கழக துணை வேந்தர் இல்லத்தின் முன்பு நடந்த ஆர்ப்பாட்டததின் போது போலீசார் நடத்திய மிருகத்தனமான அடக்குமுறையைக் கண்டித்து பார்லிமெண்ட முன்பு இந்த ஆர்ப்பாட்டம் நடத்துவதாக இருந்தது.

தற்போது பல்கலைக் கழகம் மூடப்பட்டுள்ளதால்பலகலைக கழகம் திறந்தவுடன் மாபெரும பேரணி ஒன்று நடத்தி பார்லிமெண்ட் முன்னால ஆர்ப்பாட்டம் நடத்துவது என்று முடிவு செய்யபட்டது.

மத்திய பல்கலைக் கழகங்களின மாணவர்கள் சங்கத் தலைவர்களடங்கிய ஒரு கூட்டத்தை டெல்லியில் கூட்டவும் அதில் ஒன்றுபட்ட நடவடிக்கைகள் திட்டம் ஒன்றை வகுக்கவும் டெல்லி பல்கலைக் கழக மாணவர் சங்கத்தின் நிர்வாகிகளும், அலிகார் முஸ்லிம் பல்கலைக்கழக மாணவர் சங்க நிர்வாகிகளும் முடிவு செய்துள்ளனர்.

இதற்கிடையில், டிசம்பர் 22-ந தேதியன்று பார்லிமெண்ட முன்னால் மாபெரும்பேரணியொன்றைநடத்துவது என்று பனாரஸ் பலகலைக் கழக மாணவர் சங்கம், மீரத் பல்கலைக் கழக மாணவர் சங்கம், அலகாபாத் பல்கலைக் கழக மாணவர் சங்கம ஆகியவற்றின் பிரதிநிதிகள் முடிவு செய்துள்ளனர்.

---

### பகவத்சிங் தாயாருக்கு 'பஞ்சாப் மாதா' பட்டம்

சண்டிகர், டிச. 16—

இந்திய சுதந்திரப் போராட்டத்தில், ஆங்கிலேயர்களால் தூக்கிலடப்பட்ட வீரர் பகவத்சிங்கின் தாயார் திருமதி வித்யா 'பஞ்சாப் மாதா' என்ற பட்டம் அளிக்கப் பட்டு கௌரவிக்கப் பட்டுள்ளார்

---

## டாக்டர்களுக்கு வேலை இல்லை

புதடில்லி டிச. 15—

வேலை கிடைக்காமல் வேலை கோரி பதிவு செய்து கொண்டிருக்கும டாக்டர்களின்எண்ணிக்கை 1970-ல் 2497ஆக இருந்தது. 1971-ல் 3953 ஆக உயர்ந்துள்ளது என்று நாடாளுமன்றத்தில் சுகாதார அமைச்சர் உமா சங்கர் தீக்ஷித் அறிவித்தார்.

பல ஊர்களில் மருத்துவமனைகள் இல்லை. டாக்டர்கள் இல்லாத மருத்துவமனைகள் கணக்கிலடங்கா. மக்களுக்குப் போதிய மருத்துவ வசதி கிடைக்காமலிருக்கும் இந்த நிலைமைஒருபுறம். மறுபுறத்தில் படித்துவிட்டு வேலை கிடைக்காமல் திண்டாடிக்கொண்டிருக்கும் டாக்டர்களின் எண்ணிக்கை ஆண்டு தோறும் அதிகரித்துக்கொண்டிருக்கிறது.

---

## எம். எல். ஏ.க்களின் கெரோவால்

### அமைச்சர் திண்டாட்டம்

நாகபுரி, டிச. 14—

அரசு போக்குவரத்தில் உயர்த்தப்பட்ட கட்டண உயர்வை எதிர்த்து மகாராஷ்டிர போக்குவரத்து அமைச்சர் திரு எஸ் ஆர். சாவனே எதிர்க்கட்சியைச் சேர்ந்த 25 எம்.எல் ஏ க்கள் 'கெரோ' செய்தனர். தற்பொழுதுள்ள வறட்சியான காலத்தில்பஸ்கட்டணத்தை உயர்த்துவதால் ஏழை எளிய மக்கள் மிகவும்பாதிக்கப்படுவர். ஆகவே தாங்கள் கெரோ செய்ததாகக் கூறினர்.

அமைச்சர் தன்னுடைய அறையை விட்டு வெளியேறும் முன்னதாகவே தடுத்தனர். இதனால் அமைச்சர் கேள்வி நேரத்தில் கலந்து கொள்ள முடியாமல் போயிற்று.

---

## சர்க்கார் தான்யக் கிடங்கில் ஊழல்

# 4000 மூடை அரிசி காணவில்லை

## ஊழல்பேர்வழிக்கு மந்திரி உடந்தையா?

திருக்கோயிலூர், டிச. 15—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி திருக்கோயிலூர் கிளைத் தோழர் தெய்வசிகாமணி கீழ்வருமாறு எழுதுகிறார் :—

திருக்கோயிலூரைச் சேர்ந்த அரகண்டநல்லூரில் அரிசி மில் உரிமையாளர் (எம். கே எம். எஸ்.) கமருதீன ராவுத்தர் என்பவர் சர்க்காரின கொள்முதல் (நெல்) ஏஜண்டாக இருந்து வருகின்றார்.

### அமைச்சர் தலையீடா?

கமருதீன் ராவுத்தர் என்பவரிடம் 1971-ல் சர்க்கார் கொள்முதல் செய்த நெல் தானியம் சுமார் 28000 மூட்டைகளை சர்க்கார் ஒப்படைத்திருந்ததாக சொல்லப்படுகிறது. இதில் கடந்த 3 மாதத்திற்குள் மேற்படி ஸ்டாக்கை அதிகாரிகள் தணிக்கை செய்த போது இருப்பில் சுமார் 4000 மூட்டைகள் குறைவாக காணப்பட்டன. இதன் மீது மேற்படி கமருதீன் ராவுத்தர்மீது சிவில் சப்ளை அதிகாரிகள் நடவடிக்கை எடுத்தனராம். இதில் ஒரு மந்திரி தலையிட்டு மேற்படி நடவடிக்கையை நிறுத்தி வைத்திருப்பதாக சொலலப்படுகிறது.

பிறகு குறைந்த 4000 மூட்டைகள் போக பாக்கி இருப்பு மூட்டைகளை ஷெ கமருதின் பெரிய தகப்பனா மகன் சேபுராவுத்தர் என்பவர் மீது கொளமுதல் செய்யும் ஏஜண்டு லைசென்சை புதுப்பித்துக் கொண்டு சேவு ராவுதர் என்பவரிடம் இருப்பை ஒப்படைத்து இருப்பதாகவும் சொல்லப்படுகிறது.

சேவு ராவுத்தர் என்பவருக்கு எந்தவித தகுதியோ, திறமையோ கிடையாது. அப்படி இருக்க கமருதின் ராவுத்தருக்கும ஆளும்கட்சி (தி. மு. க.) உயர் மட்ட தலைவர்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்றும், இந்த செல்வாக்கை வைத்துக்கொண்டு கொள்முதலில் பல தில்லுமுல்லுகளை செய்யப்படுகின்றன என்றும் கூறப்படுகிறது.

கடந்த வாரத்தில் பெய்த மழையின் காரணமாய் திருக்கோயிலூர் பெண்ணை ஆற்றில் வந்த பெரும்வெள்ளத்தின் காரணமாய் புரகண்ட கால்வாயிலும் தண்ணீர் புகுந்து சிறிது சேதத்தை உண்டாக்கிவிட்டது. இதை தனக்கு சாதகமாக பயன்படுத்திகொண்டு சர்க்காருக்குச்சொந்தமான நெல் மூட்டைகளில் 5000 மூட்டை வரை தண்ணீரில் அடித்து சென்றுவிட்டதாக பொய்யான தகவல் கொடுத்து11-12-72ல் தினத்தந்தியிலும்பிரசுரம்செய்யப்பட்டிருந்ததை பார்த்த நான் கடந்த 13—12—72-ல் நேரில் சென்று பாதிக்கப்பட்ட இடத்தை பார்க்க சென்றேன். ஷெ கமுருதீன் ராவுத்தருக்கு சொந்தமான இடங்களை பார்த்தபோது மொத்தம். 5 இடங்களில் உடைசல் ஏற்பட்டிருந்தது. இதில் கட்டிடதாய் சுவரில் 3 தொளைகள் இருந்தன அதன் உயரம் சுமார் 3அடி அகலம் 3,4 அடிகள் இருக்கும் நெல்பாயில் போகும் இடத்தில் சுமார்4முதல் 5 அடி வரை உள்ள மதில் தவிர மற்றவை உடைந்து விழுந்திருந்தன அடுத்தகால் டாக்ஸ் ஆயில் கம்பெனிக்கு மேலபுரம் உள்ள குடாஸில் இதுபோன்று நான்கைந்து கூரை மண் சுவர் விழுந்திருந்தது. விசாரித்ததில் மேற்படி சுவர் 17—10—72ல் விழுந்துவிட்டதாக சொல்லபடுகின்றது. மேற்படி கிடங்கில் பதரும் மணலும் கலந்த சுமார 100 மூட்டை மதிப்புள்ள பதர்கள தரையில் கொட்டி கிடந்தன.

இவை அனைத்தையும் சுற்றி பார்த்துவிட்டு கமருதீன ராவுத்தரிடம் நிலைமையை விசாரித்தேன். அப்போது அவர் சொன்னது மொத்த இருப்பு 12 ஆயிரத்தில் இருந்து சுமார் 15 ஆயிரம் மூட்டை இருககுமென்று சொன்னா. இதன் நஷ்டம சுமார் 5. 6 லட்ச ரூபாய் மதிப்புக்கு மேல் இருக்கும் என்றும் தெரிவித்தார்.

இவர் சொல்வதற்கு ஏற்ற நஷ்டம் உண்டாக வாய்ப்புகிடையாது. இப்படி சுமார் 5 முதல 8 ஆயிரம் மூட்டைகள் தண்ணீரில் அடித்து செல்ல முடியாது இது கற்பனைகும் எட்ட முடியாது. அக்கமபக்கத்தில் விசாரிததில் இந்த விஷயங்கள் அனைத்தும பொய்; சில அதிகாரிகளும் ஆளும் கட்சியினர் மேல்மட்ட தலைவர்களும் ஒரு சில அமைச்சர்களின உதவியின் பெயரால் இந்த பெருத்த சேதம

(1-ஆம் பத்தி பார்க்க)

---

## விவசாயத் தொழிலாளர் சங்கம் அமைப்பு

மதுரை, டிச. 12—

மதுரை வடக்குத்தாலுகா கோயில் பாப்பாகுடி கிராமத்தில் சர்வ கட்சி விவசாய தொழிலாளர்களும், கொத்தனர்களும் 2-12-72-ம் தேதி மதுரை தாலுகா விவசாயிகள் சங்க அலுவலகத்தில் கூடி 19 பேர் கொண்ட ஐக்கிய கமிட்டியை தேர்ந்தெடுத்து கோரிக்கையை உருவாக்கினர்கள்.

### கோரிக்கைகள்:

1. ஊரை மையமாக வைத்து களத்திலிருந்து வயல் உள்ள தூரத்தைக் கணக்கிட்டு 3 தரங்களாக பிரித்து ஏற்கனவே பெற்றுவந்த கூலி தரம்வாரியாக காணிக்கு (50சென்ட்) 25, 30, 35 மரககால் (2 படி) என்றிருப்பதை முறையே 30, 35, 40, 45, 50 மரக்கால் என உயர்ததித் தரவேண்டும்.

2. ஒரு ஏக்கர் நிலத்தை 75 சென்ட் என்றும், அதற்குக் குறைவானது என்றும் கூறி, மறைமுகமாக தொழிலாளர்களை நிலச்சுவான தார்கள் ஏமாற்றி கூலியில் சுரண்டி வந்ததை எதிர்த்து ஒரு ஏக்கர் நிலத்தை ஒரு ஏக்கர் என்று கூறி கூலி கொடுக்கவேண்டுமென்றும் கோரியுள்ளனர்.

வருகிற அறுவடையில் இக்கூலியைப் பெற சகல பகுதி நிலச் சொந்தக்காரர்களையும் சந்தித்து கோரிக்கைகளை எடுத்துச்சொல்லி இணங்கச்செய்வதென்றும், அவர்கள் ஒப்புதல் கொடுக்காவிட்டால இக்கூலியைப் பெற சர்வ கட்சியைச் சேர்ந்த தொழிலாளர்களும கொத்தனர்களும் ஒன்றுபட்டு போராடுவதெனவும முடிவு செய்துள்ளார்கள்.

இறுதியில் சர்வகட்சியினரும விவசாயிகள் சங்கத்தினருமாக 19 பேர்கள் கொண்ட ஐக்கிய செயல் கமிட்டி தோந்தெடுக்கப்பட்டது.

### நிர்வாகிகள்

திரு. கி. சுப்பிரமணி தலைவராகவும. என். கணபதி துணை தலைவராகவும், என். வி. கலாநிதி, எஸ்.பிச்சை, பி. மணிசெயலாளர்களாகவும் திரு .தி. மொக்கைசாமி பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனா.

### கமிட்டி உறுப்பினர்கள்

கே. ராஜேந்திரன், ஆ. சின்னவேட்டை, ஒய். குருசாமி ஏ. சிவராமன், சோணை, எம். பரமசிவம, குருநாதன். அ.இருளாண்டி பி. முருகன், எம. காந்தி, குமார். சி. தங்கம், எஸ். பாண்டி ஆகியவர்கள் தேர்ந்தெடுககப்பட்டனர்.

தோழர் கே. பி. ஜானகியாமமாள் கூட்டததில் கலந்து கொண்டார்கள். விவசாயத் தொழிலாளர்களில் மிகவும் நியாயமான இந்தக் கோரிக்கைகளை நீங்கள் அடைய விவசாயிகள் சங்கமும், கம்யூனிஸ்ட் கட்சி மார்க்சிஸ்ட் சகலவிதமான ஆதரவும் கொடுத்து உதவி உறுதுணையாக நிற்கும என்று வாழ்த்துக்கூறி கூட்டம் முடிந்தது.

### அமெரிக்க உளவாளியாகச் செயல்படும்

# பத்திரிகைக்கு அரசு உதவிபுரிவதுஏன்?

## நாடாளுமன்றத்தில் ஜோதிர்மாய் பாசு கேள்வி

புதுடெல்லி, டிச. 15---

**கல்கத்தாவிலிருந்து வெளிவரும் "ஆனந்த பஜார் பத்திரிகை" அமெரிக்க உளவாளியாகச் செயல்படுவதை தோழர் ஜோதிர்மாய்பாசு அம்பலப்படுத்தியுள்ளார். இந்தப் பத்திரிகையின் தேச விரோத நடவடிக்கைகளை விசாரிக்க ஒரு விசாரணைக் குழுவை நியமிக்க வேண்டும் என்றும் அவர் கோரியுள்ளார். டிச. 1ம் தேதி நாடாளுமன்றத்தில் தோழர் ஜோதிர்மாய்பாசு ஆற்றிய உரை வருமாறு:---**

நம் நாட்டில் சி. ஐ. ஏ. ஊடுருவலின் வெற்றிக்குச் சின்னமாக "ஆனந்த பஜார் பத்திரிகை" திகழ்கிறது. சி. ஐ ஏ. உளவாளிகளின் கூடாரமாக அது உள்ளது கடந்த ஐந்து ஆண்டுகளில் இந்தப் பத்திரிகையைச் சேர்ந்தவாகள் எத்தனை பேர் அமெரிக்காவுக்குச் சென்று வந்துள்ளனர் என்பதை உள்துறை அமைச்சர் தெரிவிக்க வேண்டும். ஒரு பக்கத்தில் தலைவர்கள் நம் நாட்டில் சி. ஐ. ஏ. நடவடிக்கைகள் பற்றி கூரை மீதிருந்து கூச்சல் போடும் போது மறு புறத்தில் "ஆனந்த பஜார் பத்திரிகை" வளர்ச்சியடைந்து கொண்டிருக்கிறது.

**அமெரிக்கப் பண உதவி**

இந்தப் பததிரிகையைச் சேர்ந்தவர்கள் மனச் சாட்சியை அமெரிக்காவுக்கு விற்றுவிட்டனர் இவர்களுககு இந்தப பத்திரிகை நிர்வாகம் பணம் பட்டுவாடா செய்கிறது.

இந்தப் பத்திரிகை நிறுவனத்தின டைரக்டர்களில் ஒருவரான அபிக் சர்க்கார் ஆசியன் நியூஸ் ஏஜென்சி என்ற செய்தி ஸ்தாபனத்தின் நிருபராக இருக்கிறார். சி. ஐ. ஏ. கூட்டுமுயற்சியில் இந்தச் செய்தி ஸ்தாபனம், ஹாங்காங்கிலும். மணிமாவிலும், மற்ற இடங்களிலும செயல்படுகிறது.

**தபால்-தந்தி இலாகா செயல்படுகிறதா?**

அபிக்சர்க்காருக்குமேற்கு வங்க அரசின் செய்தித் துறையிலிருந்து செய்தி சேகரிப்பதற்கான சான்றிதழ் வழங்கப்பட்டுள்ளது.

ஆனந்தபஜார் பத்திரிகையையும் இந்துஸ்தான் ஸ்டாண்டர்டின் டெலக்ஸ் அமைப்பையும் சட்ட விரோதமாகப் பயன்படுத்துகின்றனர். தபால் தந்தி இலாகாவின் புலனாய்வுத் துறை என்ன செய்து கொண்டிருக்கிறது?

நாடாளுமன்ற ஆலோசனைக் குழுக் கூட்டத்தில் இந்தப் பிரச்சனையை நான் எழுப்பினேன். உள்துறை அமைச்சர் பந்த் பதிலளித்தார். சுதந்திரப் போராட்டத்தில் ஆனந்த பஜார் பத்திரிகையின் பாத்திரத்தை அவர் புகழ்ந்தார். பின்னர் கீழ்வருமாறு அவர் கூறினார்.

அமெரிக்காவுக்குச் செய்தி அனுப்புவதுசம்பந்தமாக தபால் தந்தி இலாகா ஆராய்கிறது. செய்தி அனுப்பியவர்கள் இந்தப் பத்திரிகையுடன் சம்பந்தப்பட்டவர்கள் அல்ல எனினும் அரசாங்கம் விசாரித்து வருகிறது."

**விசாரணையின் முடிவென்ன?**

விசாரணையிலிருந்து தெரிந்ததென்ன என்பதை அறிவிக்குமாறு அமைச்சரைக் கேட்டுக் கொள்கிறேன்.

இது மிகவும் அபாயகரமான தேசவிரோத நடவடிக்கையாகும். இந்தோ பாகிஸ்தான் யுத்தத்தின் தணிக்கை செய்யப்படாமலே செய்தி அனுப்பப்பட்டிருக்கிறது. ஒரேயொரு முறை அனுப்பப்பட்டது மட்டுமே தற்செயலாகப் பிடிபட்டிருக்கிறது. 10-12-71-ம் தேதி அந்தச் செய்தியை அபிக் சர்க்கார் அனுப்பியிருக்கிறார்.

**உண்மையை நிரூபிப்பேன்**

சட்டத்துக்கும் விதிகளுக்கும் புறம்பாக இந்தச்செய்தி அனுப்பப்பட்டுள்ளது. இந்திய அரசுக்கும் அதன் நடவடிக்கைகளும் எதிராக இயக்கம் நடத்திக் கொண்டிருந்தவர்களுக்கும் உதவியளிக்கும் முறையில் இவ்வாறு செய்யப்பட்டுள்ளது.

ஆலோசனைக் குழுக் கூட்டத்தில் இதைப் பற்றி தவறான விவரம் கொடுக்கப்பட்டுள்ளது. இதை அனுப்பியவர் அபிக் சர்க்கார் அல்ல என்று கூறப்பட்டது ஆனால் உண்மையான நகலை சபையில் தாக்கல் செய்யத் தயாராக இருக்கிறேன். இந்தச் செய்தியை அனுப்பியது ஆனந்த பஜார் பததிரிகையின் டைரகடர் அபிக் சர்க்கார்தான், என்பதை அது நிரூபிக்கிறது.

இந்த விவரத்தை யு. என். ஐ. செய்தி ஸ்தாபனம் வெளியிட்டுளளது. அதைப் பிரசுரிக்க வேண்டாம் என்று ஆனந்த பஜார் பத்திரிகையைச் சோந்த பெரிய நபர் ஒருவர் தொலைபேசி மூலம் எல்லா பத்திரிகைகளையும் கேட்டுக் கொண்டிருக்கிறார். இந்தச் செய்தி 3 பக்கச் செய்தி. அதிலிருந்து ஓரிரு பகுதிகளை வாசித்துக் காட்டுகிறேன். கேட்போரை அது கொதிப்படையச் செய்யும்.

"கடந்த உலக யுத்தத்தின்போது ஹாலந்தில் ஹிட்லர் பிரவேசித்ததைப் போல உறுதியுடன் செல்லும் ராணுவத்தைத் தடுத்து நிறத்துவதற்கு தடை ஏதும் இல்லை" இது ஒரு பகுதி.

இன்னொரு பகுதி வருமாறு:—

பழைய தொலைபேசி இணைப்புகள்மூலம் டாக்காவிலிருந்து லண்டனுக்கு வரும் தகவல்கள்......

இந்தச்செய்திகளை அனுப்பியிருப்பது நாட்டுக்கு எதிரான துரோக நடவடிக்கையாகும். பாதுகாப்பு விதிகளில் இதைப்பற்றி தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

**தண்டனை கொடுத்தவருக்கு ஆபத்து**

"தணிக்கையிலிருந்து தப்பும் முறையில் மறைமுகமாகவோமறைமுறையிலோ தகவல் அனுப்புவது ஐந்து வருட சிறைவாசம் அல்லது அபராதம் அல்லது இரண்டும் விதிக்கத் தகுந்த குற்றமாகும்.

கல்கத்தாவில் ஒரு போலீஸ் அதிகாரி ஏதோ நடவடிக்கை எடுத்தார். ஆனால் அந்த இளம் அதிகாரி சிறைப்படுத்தப் பட்டுள்ளார்.

பின்னர் மேலேயிருந்து நிர்ப்பந்தம் அண்டும் கைவிடப்பட்டுள்ளது. விசாரணையின்றி காவலில் வைப்பதை நாங்கள் எதிர்க்கிறோம். 78 வயதான நாடாளுமன்ற உறுப்பினர் பந்ஜா உளநாட்டு பாதுகாப்பு பராமரிப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டு ஒருவருடம் சிறையில் வைக்கப்பட்டார். பின்னர் அவர் மீண்டும் கைது செய்யப்பட்டிருக்கிறார். அவருக்கு ஒருவருடமாகக் குற்றப் பத்திரிகை கொடுக்கப்படவில்லை. 5 சத விகித கடத்தல் பேர்வழிகளே பிடிக்கப்படுகின்றனர்.

ஆனந்த பஜார் பத்திரிகைக்கு என்ன வருமானம் கிடைக்கிறது என்பதை அமைச்சர் தெரிவிக்க வேண்டும் அமெரிக்காவிலிருந்து அபிக் சர்க்காருக்கு அந்நியச் செலாவணி வழங்கப்படுகிறது. அவர்கள் அமெரிக்காவுக்கும் மற்ற நாடுகளுக்கும் அடிக்கச் செல்லுகின்றனர்.

**அமைச்சரின் பதில் தேவை**

மனைவிமார்களுடனும், உதவியாளர்களுடனும் ஆடம்பர வாழ்க்கை வாழ்கின்றனர். இதற்கெல்லாம பணம் எங்கிருந்து வருகிறது. பல நாடுகளில் போலி அலுவலகங்கள் வைக்கப்பட்டிருப்பதை நாம் அறிவோம். பணம் எடுத்துக் கொண்டு அங்கு சென்று உல்லாச வாழ்க்கை வாழ்கின்றனர். இந்தப்பத்திரிகை அலுவலர் எண்ணிக்கையையும் அவர்களுக்கு அளிக்கப்படும் அந்நியச் செலாவணி விவரத்தையும் தெரிவிக்குமாறு கோருகிறேன்.

இந்தப் பத்திரிகையின் சரிதை அவமானகரமானதாகும். இந்தப் பத்திரிகைக்கு ஒதுக்கப்பட்ட 4322 மணங்கு காகிதக் கோட்டாவை கள்ளமார்க்கெட்டில் விற்றது சையும் களவாகப் பிடிபட்டிருக்கிறது.

**பணம் கையாடல்**

பிராவிடண்ட் பண்டு பணம் ரூ- 13.32 லட்சத்தை இந்தப் பத்திரிகையின் நிர்வாகம் கையாடல் செய்திருப்பதும் சமீபகால நிகழ்ச்சி. ரவீந்திர நினைவு நிதி பணம் ரூ. 10 லட்சமும் ஏப்பம் விடப்பட்டுள்ளது.

இந்தப் பத்திரிகைக்கு தேசியமயமாக்கப்பட்ட பாங்குகளிலிருந்து கொடுக்கப்பட்ட கடன் ரூ. 70 லட்சம் பாக்கியிருக்கிறது. அரசாங்கப் பணத்தைக் கொண்டு மக்கள் பணத்தைக் கொண்டும் இந்தப் பத்திரிகை தேச விரோத நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகிறது.

இந்தப் பத்திரிகையின் பொன் விழாவில் பிரதமர் இந்திரா கலந்துகொண்டிருக்கிறார்.

**விசாரணை குழு தேவை**

ராஜாராம் மோகன் ராயின் 150-வது பிறந்தநாள் விழாவில் கலந்துகொள்ள பிரதம மந்திரிக்கு நேரம் கிடைக்கவில்லை. ஆனால் இதற்கு மட்டும் நேரம் கிடைத்திருக்கிறது. இந்தப் பத்திரிகையைப் பற்றிய முழுவிவரங்களையும் அரசு சபையில் தாக்கல் செய்ய வேண்டும் என்றும், இதன் நடவடிக்கைகளை விசாரிக்க ஒரு விசாரணைக் குழுவை நியமிக்கவேண்டும் என்றும் கோருகிறேன்.

---

### துப்புரவுத் தொழிலாளர்க்கு எதிராகப்

# பாதுகாப்புச் சட்டம்

புதுடில்லி, டிச. 15—
வேலை நிறுத்தம் செய்யும் டில்லி மாநகராட்சி துப்புரவுத் தொழிலாளர்களுக்கு எதிராகப் பாதுகாப்பு விதிகள் பயன் படுத்தப்படுகின்றன.

அவசரகால நிலைமையை ரத்து செய்ய வேண்டும் என்று நாடாளுமன்றத்தில் எதிர் கட்சிகள் கோரிய போது நாட்டின் பாதுகாப்புத் தேவைக்கு மட்டுமின்றி பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் அதிகாரத்தை அரசாங்கம துஷ்பிரயோகம் செய்யாது என்று பிரதமர் இந்திராகாந்தி வாக்களித்தார்.

அரசாங்கத்தின் எத்தனையோ வாக்குறுதிகள் காற்றில் பறந்ததைப்போலவே இந்த வாக்குறுதியும் பறந்துள்ளது.

தெருக்களைச் சுத்தம் செய்து நகரின் சுகாதாரத்தைப் பாதுகாக்கும துப்புரவுத் தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளைக்கூட பேச்சுவார்த்தை மூலம் தீர்க்காமல் அவர்கள் மீது பாதுகாப்பு விதிகளின் படி நடவடிக்கை எடுக்கப் படுகிறது.

இதற்கான உத்திரவை டில்லி, லெப்டினனட் கவர்னர் பி. பிரசாத் பிறப்பித்துள்ளார்.

பாதுகாப்பு விதிகளின் 118-வது பிரிவின்கீழ் துப்புறவுத் தொழிலாளர்களின் வேலைநிறுத்தம் தடை செய்யப்பட்டுள்ளது.

இந்த நிலைமையிலும் கடும் அடக்குமுறையை எதிர்த்து வாரக்கணக்கில் துப்புரவுத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

---

### காஷ்மீருக்கு மாநில சுயாட்சி

# ஷேக் அப்துல்லா கோரிக்கை

ஸ்ரீநகர், டிச. 16—
காஷ்மீரின் பழைய முதலமைச்சர் சேக் அப்துல்லா காஷ்மீரின் பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரம், மத்தியஅரசுடன் ஏற்படுத்திக் கொள்ளும் உறவு, மாநிலத்தின் சுதந்திரத்தை வரையறுத்துக் கொள்வதற்கு மாநில சட்ட மன்றத்திற்கு "மாநில சுயாட்சி" அவசியம் தேவை என தனக்கு ஸ்ரீநகர் நகரவை அளித்த வரவேற்பில் குறிப்பிட்டார். அவர் மேலும் கூறியதாவது:—

நம்முடைய பகுதியைப் பற்றி எந்தவிதமான வியாபாரப் பேரமும் பேசவில்லை என்பதை முதலில் தெளிவாக்கிக் கொள்வதாகவும் அவர் கூறினர்.

1947-ல் துணைக் கண்டத்தில் பரவியிருந்த இருள்மயமான காலத்தில். நாம் இந்தியாவோடு இணைந்திருந்தோம். மகாத்மா காந்தியின் கரங்களை வலுப்படுத்தவே அவ்வாறு செய்ய வேண்டிய நிலை ஏறபட்டது.

ஆனால் இந்தியாவினுடைய சிலநண்பர்கள் காஷ்மீரையும், மற்ற மாநிலங்களைப்போல இந்தியாவின் ஒரு மாநிலமாக ஆக்க விரும்பினர்கள். ஆனால் நண்பர்களின் முயற்சி பலிக்காமல் போகவே ஆயுதத்தைக் கொண்டு மாற்ற முயற்சி செய்தனர். அதற்கான நடவடிக்கைகளையும் எடுத்தனர்.

ஆனால் காஷ்மீர் மக்களின் ஒற்றுமையையும், உறுதியையும் அவர்களால் மாற்றமுடியவில்லை

1953-க்குப் பிறகு (சேக் மந்திரிசபையை டிஸ்மிஸ் செய்தபிறகு) தன்னை அமெரிக்க ஏஜெண்ட் எனவும் வசைமாறி பொழிந்தனர்.

மேலும், "நம்மிடையே ஒற்றுமை தேவை, நாம் எல்லோரும் விரும்புவது. நமக்குள்ள மதிப்பை பெறுவதே ஆகும். தற்பொழுதுள்ள காலக் கட்டத்தில் காஷ்மீர் மக்கள் விரும்புவது ஜனநாயக ஆட்சியும், சட்டத்தின் முக்கியத்துவம் வாய்ந்த பணியுமே ஆகும் எனவும், இதற்கு மாநில சுயாட்சி தேவை எனவும் குறிப்பிட்டார்.

---

# அர்ஜெண்டைனு

## தென் அமெரிக்காவின் வியட்னும்

தென் அமெரிக்காவிலுள்ள அர்ஜண்டைனவின் ஆளும் இராணுவக்கூட்டு நிலைகுலைந்து சரிந்து வருகிறது. நிலைமை கட்டுக் கடங்காமல் அவர்கள் "எதிர்க் கட்சியின்" உதவியை நாட முயலுகின்றனர்.

17 ஆண்டுகளுக்கு முன் நாட்டைவிட்டு வெளியேறிய பெரான் என்ற அன்றைய சர்வாதிகாரி இப்போது அர்ஜென்டைனு திரும்பியிருக்கிருர்.

இதன் பின்னணி என்ன?

1966-ம் ஆண்டு ஏற்பட்ட வெகுஜன இயக்கத்தை நசுக்க ஆளும் இராணுவக் கூட்டு அடக்கு முறையைக் கையாண்டு பதவிக்கு வந்தது. ஆனால் அர்ஜெண்டைனுவின் அமெரிக்க சார்புடைய முதலாளித்துவ ஆட்சி முறை, எந்த அடிப்படையான பிரச்சினையையும் தீர்க்க முடியவில்லை. இதனைச் சமாளிக்க தொழிலாளி வர்க்கத்தையும், வெகுஜனங்களையும் கசக்கிப் பிழிய ஆரம்பித்ததின் விளைவாக வேலையில்லாத் திண்டாட்டம், வறுமை, வெகுஜன அதிருப்தி அதிகமாகியது. முறபோக்கு எண்ணம்கொணட இளைஞர்களும், தொழிலாளர்களும் இந்த நிலைமையிலிருந்து நாட்டை மீட்க கொரில்லா முறையைத் தேர்ந்தெடுத்தனர். ராணுவ சர்வாதிகாரச் சூழ்நிலையில் அவர்களுக்கு வேறு வழியில்லை.

இந்த கொரில்லாக்கள் தனித்தனியாக மூன்று குழுக்களாகச் செயல்பட்டனர்.

இவர்கள் தனித்தனியாகச் செயல்பட்டதால் ஆளும் இராணுவக் கூட்டுககு, இவர்களது வெற்றிகளைக் கட்டுப்படுத்துவது சுலபமாயிற்று.

**சோதனை**

அர்ஜன்டைனுவில், "ராவ்சன்" சிறை, பலத்த பந்தோபஸ்தோடு உள்ளது. இதிலிருந்து தப்புவது எனபது, எண்ணிப் பார்க்கமுடியாது. சிறைப் பிடிக்கப்பட்ட கொரில்லாக்களை, இராணுவ ஆட்சி, இந்தச் சிறையில் தான் வைத்திருந்தது.

**ஒற்றுமையும் பலமும்**

அர்ஜென்டைனுவில் தோன்றிய முதன்முறையான மூன்று புரட்சிகர இயக்கங்களும், ஒன்று சேர்ந்து சிறைபிடிக்கப்பட்டவர்களை தப்புவிக்க முயற்சித்தது இதனபடி 25, புரட்சியாளர்கள் ஆகஸ்டு மாதம் 15 ஆம் தேதி காவலர்களுடன் மோதி தப்பினர், அருகிலுள்ள டரிலு என்ற விமானத் திடலுக்குச் சென்று அங்கிருந்து விமானம் ஒன்றைக் கைப்பற்றி சிலி நாட்டை அடைந்தனர். அங்கிருந்து கியூபாவின் தலைநகரான ஹவானவை அடைந்தனர்.

**இன்றைய நிலைமை**

வெகுஜன இயக்கமும், புரட்சிகர இயக்கமும், வலுவும் பொலிவும் பெற்று மேலும் மேலும் வளர்ந்து வருவது கண்டு, இராணுவக் கூட்டு பீதியடைந்திருக்கிறது.

சீர்திருத்தவாத கட்சியும் இன்றைய எதிர்க் கட்சியுமான 'பாபுலிஸ்ட" கட்சி எனபது உள்நாட்டு முதலாளிகளுக்கான ஒரு தேசீயக் கட்சி. முற்போக்கு கோஷத்தைப் போட்டுக்கொண்டே உள்நாட்டு முதலாளிகளை வளர்க்க விரும்புகிறது.

புரட்சிகர இயக்கம், இராணுவக் கூட்டையும், வர்க்கத் துரோகத்தையும், தன் உட் சருவாகக் கொண்ட, "பாபுலிஸ்ட்" கட்சியையும் எதிர்த்துப் போராடி வருகிறது. (இந்த விபரங்கள் டிரைகானடினெனடல் என்ற கியூபாவிலிருந்து வெளிவரும் ஏட்டில் வெளியானவை)

மக்களிடம், புதுமையான கோஷத்தையும், புதிய தலைமையையும் காட்டி அவர்களைப் புரட்சிகரப் பாதையிலிருந்து திருப்பும் நோக்கத்தை நிறைவேற்றவே, பெரான், அர்ஜெண்டைனுவிற்கு தருவிக்கப்பட்டிருக்கிருர்.

ஆனால், நாட்டில் அமெரிக்கச் சுரண்டலும்,வறுமையையும், வேலையில்லாத் திண்டாட்டமும் ஒழிந்து, சுரண்டலற்ற ஒரு சமுதாயத்தை கட்டி அமைக்கும், மகத்தான பணியில் ஈடுபட்டிருக்கும் அர்ஜன்டைனு புரட்சியாளர்களின் வெற்றியை எந்த சக்தியும் தடுத்துவிட முடியாது என்பது உறுதி. பாபுலிஸ்ட் தலைவர்களின் "புரட்சிகரமான" கோஷங்களை மறைமுகமாகச் செயல்படும் புரட்சி இயக்கம் மக்களிடையே அம்பலப்படுத்தி வருகிறது.

பெரான் நேரில் வந்து நிலைமையைக் கண்டபின்னர் ஒன்றும் செய்ய முடியாது என்பதை உணர்ந்து அர்ஜன்டைனுவிலிருந்து திருமபிச் செல்லுகிருர்.

விபரம்: டிரைகான்டினென்டல்

---

# கிராமத்து நண்பர்கள் சந்தித்த போது...

(கண்ணம்மா சீனி வாங்கச் சென்று கிடைக்காமல் திரும்பி வருகிருர். வழியில் பொன்னம்மாவைச் சந்திக்கும் போது......)

கண்ணம்மா:- என்ன பொன்னம்மா அக்கா. பையும் கார்டுமா பொறப்பட்டுட்டிங்க. எங்கே?

பொன்னம்மா:- ஆமா கண்ணம்மா. கூப்பன்லே சீனி போடுருங்களாம், பிள்ளைக்குப் பால்ல போட்டுக் கொடுக்க சீனியில்லே. வாங்கி வரலாம்னு புறப்பட்டேன்.

கண்ணம்மா:- நானும் அதுக்குத்தாக்கா போயிட்டு வாரேன். இந்த மாதம் கிராமங்களுக்குச் சீனி போடலியாம். நகரத்துக்கு மட்டுந் தானும் கொடுக்கிருங்க ஏய்யான்னு? எங்களுக்கு என்ன தெரியும், மேலேருந்து உத்தரவுங்கிருங்க.

பொன்:- என்ன கண்ணம்மா இது அக்ரமம். நகரத்துல உள்ளவங்களுக்குத் தான் சீனின்னு, கிராமத்தில் உள்ளவங்க என்ன செய்யிறது?

கண்:- அக்கா...அ! எந்த விசயத்தில்தான் அரசாங்கம் எல்லாரையும் சரி சமமா நெனைக்குது. காரியம் ஆகணுமேன்னு கழுதையோட காலையும் பிடிக்கிருங்க. காரியம் முடிஞ்சு போச்சுன்னு, உயரத்திலே போயி நின்னுக்கிட்டு "சீ, கழுதேங்கிருங்க" சமுதாயம் போற போக்கைப் பார்த்திங்களா?

"உழுபவன் உலகத்திற்கு அச்சாணி"ன்னு வள்ளுவரு சொல்லியிருக்காரு, அந்த உழவரோட பிள்ளைக்குப் பால்ல போட்டுக் கொடுக்க சீனி இல்லே. பயித்துக்குப் போட உரம் கெடைக்கல்லே. இந்த லட்சணத்திலே "ஏழைகளின் சிரிப்பிலே இறைவனைக் காணுகின்ருேம்" என்கிற பிரசசாரங்கள் வேற.

பொன்:- 'தங்கச்சி! பிரச்சாரத்திலே எந்த விதக் கொறையும் இல்லே. மாநாடுன்னு லட்ச லட்சமா ரூபாய்களைச் செலவுசெஞ்சு அலங்காரம் பன்ருங்க. மக்கள் மத்தியில்நின்னுக்கிட்டு ஆடம்பரச் செலவைக் கட்டுப்படுக்துகிருேம் என்கிருங்க. சொல்லுக்கும் செயலுக்கும் எந்த வித ஒத்துமையும் இல்லே.

கண்: அதுமட்டும் இல்லேக்கா! இன்னிக்கு காசில்லேன்னு எந்தக் காரியமும் நடக்கிறதில்லே.எந்த ஆபீச எடுத்துக்கிட்டாலும் காசு தான்பேசுது. கண்ணுளித் திட்டத்துக்குக் காசுங்கிருங்க. பிச்சைக்காரர் மறு வாழ்வு நிதிக்கு காசுங்கிருங்க.

அட அதுதான் போகட்டும். ஏழை விவசாயி விவசாயச் செலவுக்கு யூனியனிலோ அல்லது நில அடமானப் பேங்கிலோ, 500 ரூபாய் கடன் வாங்கினுன்னு, 500 ரூபாயும் வாங்குறதுக்குள்ளே 450 ரூபாய் செலவு கணக்குக் காட்டுருன். "உழுதவன் கணக்குப் பார்த்தா உழக்குக்கூட மிஞ்சாது"ங்கிற பழமொழியை இத நெனைச்சுத்தான்சொன்னுர்களோ? என்னவோ?

பொ: இந்த அரசாங்கத்தாலே விவசாயிகளுக்கு எந்தவித நன்மையும் இல்லேல்னு சொல்லு.

கண்: உண்மைதானக்கா! எவ்வளவு திருட்டுத்தனம் நடககணுமோ அவ்வளவும் நடக்குது. சீனி கார்டு கொடுததாங்களே, நம்ம கிராமததிலேஎல்லாருக்குங் கொடுத்தாங் கங்கிறீங்களா? இல்லே......

பொன்: ஏன் எல்லோருக்கும் இல்லையா?

கண்; இல்லாமப் போகுமா? எல்லாருக்குங் கார்டு உண்டு. ஆனுல் கெடைக்கல்லே.

பொன்: என்ன ஆச்சு?

கண்: நம்ம ஊரு பஞ்சாயத்துத் தலைவருக்கிட்டே பல கார்டுகள் இருக்கு. அவருக்குச் சொந்தக்காரர்களிடத்திலே பல கார்டுகள் இருக்கு. இன்னும் சில பெருந்தனக் காரர்கள் கையிலே இருக்கின்றன. எல்லாமே அவங்க வச்சுக்கிட்டு சீனியை அவங்களே வாங்கி வெளியில் வித்து லாபம் சம்பாதிக்கிருங்க.

பெண்: அது எப்படி முடியும்?

கண்: அக்கா... அ! பணங் கிடைக்கிறதுன்னு இந்தப் பூமியையே புரட்டி விடக் கூடியவங்க நம்ம நாட்டுப் பண முதலைங்க அவங்களுக்குத் தெரியாத யோசனையா?

கடையில் சீனி கிலோ 4 ரூபாய் விற்குது. கூப்பன்களைத் திரட்டி மொத்தமா வாங்கி வெளியில் வித்து லாபம் சம்பாதிக்கிருங்க.

பொன்: நம்ம ஊர்லே சிலபேரு கூப்பன் கெடைக்கல்லேன்னு சொல்ருங்களே! அதெல்லாம் இப்படித்தான் நடக்குதா?

கண்: வேற என்ன நெனைக்கிறீங்க! கணக்குப் பிள்ளையைக் கார்டு கேட்டா. பஞ்சாயத்துத் தலைவர்கிட்டே போயிடுச்சுங்கிருர், தலைவர் கிட்டே கேட்டா, என் கிளர்க்கைக் கேளுங்கிருர். கிளர்க்கைக் கேட்டா உங்களுக்கு வரலேங்கிருர். இப்படியே பதிலச் சொலலிக காலங் கடத்தி கடைசியில் நோட்டாவே முடிஞ்சு போச்சுன்னு பதிலச் சொல்லி விடுருங்க.

நம்மைப் போல வெவரந் தெரிஞ்சவங்களுக்கு மட்டும் கார்டு தந்திடுவாங்க. அறியாத பாமர மக்களை ஏமாத்துருங்க. இதே மாதிரி தான் எல்லாமே நடக்குது.

பொன்: இப்போ கிராமத்துக்கே சீனியில்லேங்கிறதும் அப்படித்தான் இருக்குமோ?

கண்: எப்படியோ தெரியலே. இதுக்கு ஒரு முடிவு எடுக்கல்லேன்னு, நாம வாழ முடியாது. "கிராமங்கள் தான் ஒரு நாட்டின் உயிர் நாடி"ங்கிருங்க. அந்தக்கிராமத்திலே யிருந்து தான் எல்லா விதமான பொருள்களும் கெடைக்கின்றன. அந்தக் கிராமத்தில் விவசாயிக்குச் சீனி இல்லேன்னு என்ன அர்த்தம். நம்மை ஏமாத்திரதாகத்தானே அர்த்தம்.

பொன்: ஆமா கண்ணம்மா. என்ன கொடுமை இந்தத் தி. மு. க. ஆட்சியாலே.

கண்: தி. மு. க ஆட்சி மட்டும் இல்லே. இந்திரா காந்தி ஆட்சியுந்தான் இதற்குக் காரணம். விவசாயிங்க தன் உற்பத்திப் பொருள்களை விற்கும்போது எல்லாப் பொருள்களின் விலையையுங் கொறச்சுப் பிடுருங்க. ஆனு அதே விவசாயி வாங்கும்போது வெலையை ஏத்திப்பிடுருங்க. இடையில் இருக்கக்கூடிய பணக்காரங்களுக்குப் பணத்து மேல பணமாச் சேருது.

நமக்குப் பின்னுடிச் சுதந்திரம் அடைஞ்ச மக்கள் சீனவிலே எப்படித் தெரியுமாக்கா! விவசாயிகளிடத்திலே கொள்முதல் செய்யிறபோது அதிக வெலைக்குக் கொள்முதல் செய்யிருங்க. விற்கும்போது கொறஞ்ச வெலைக்குக் கொடுக்கிருங்க. இதனுல் ஏற்படுற நஷ்டத்தை அரசாங்கம் மானியம் கொடுத்து சரிக்கட்டுது. இங்கே... பணக்கார வர்க்கம் வளரவும், பாட்டாளி வர்க்கம் தேயவும் அரசாங்கம் சட்டம் செய்யுது.

பொன்: இதுக்கு என்ன தான் செய்யிறது?

கண்: என்ன செய்யிறதா? வாங்க இப்பவே போய் நம்ம கிராம கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) கட்சிச் செயலாளர் கிட்டே சொல்லி இதுக்கொரு ஏற்பாடடைச் செய்வோம். ஒன்று எல்லாருக்கும் ஒரே மாதிரியா அரசாங்கம் நன்மை செய்யணும். இல்லேன்னு பதவியை விட்டு விலகிப் போகணும். அது வரையில நீண்ட நாள் போராட்டம் ஒன்று துவக்க ஏற்பாடு செய்யணும். வாங்க அக்கா போகலாம். (புறப்படுகின்றனர்)

**புலவர் சே. மாணிக்கம்**
தேவரம்பூர்.

---

### மார்க்சிஸ்ட் தோழர்கள் விடுதலை

# பொய் வழக்கு தள்ளுபடி

மதுரை, டிச. 15—
இந்திரா காங்கிரஸ் எம். பி.யான ஆர். வி சுவாமிநாதன் தூண்டுதலின் பேரில் மதுரை மோட்டார் தொழிலாளர்கள் சங்க (சி.ஐ டி யூ) உறுப்பினர்கள், மார்க்சிஸ்ட் கட்சித் தோழர்கள்மீது போடப்பட்ட வழக்கு பொய்யென்று தள்ளுபடி செய்யப்பட்டது.
இதுபற்றிய விவரம் வருமாறு:—

மதுரைத் தொகுதி நாடாளுமன்ற உறுப்பினரும், இந்திரா காங்கிரஸ் தலைவருமான ஆர். வி. சுவாமிநாதனுக்கு சொந்தமான பாண்டியன் ஆட்டோ சர்வீசில் வேலை பார்க்கும் தொழிலாளர்களே தங்களது உரிமைகளைப் பாதுகாக்க மதுரை மோட்டார் தொழிலாளர் சங்கத்தில் உறுப்பினர்களாகச் சேர்ந்தனர். இதனுல் ஆத்திரம் கொண்ட நிர்வாகம முக்கிய ஊழியர்களான ஆர். எஸ். அந்தோணிசாமி. எஸ். பி. கேசவன், மகாலிங்கம், என் வி. ஏ. ரத்தினம், வி கே. கருப்பையா ஆகியோரை வேலை நீக்கம் செய்தது.

நிர்வாகத்தின் பழிவாங்கும் போக்கைக் கண்டித்து கம்பெனி அருகில் தோழர்கள் ஏ.பாலசுப்ரமண்யம், கே பி ஜானகியம்மாள் ஆகியோர் கலந்து கொண்ட பொதுக் கூட்டம் ஒன்று நடந்தது. மேலும் ஆத்திரம கொண்ட நிர்வாகம் குண்டர்களைத் தயார் செய்து பொதுக் கூட்டத்தைக் கலைக்க முயற்சித்தது.

ஆனுல், அங்கிருந்த பொதுமக்கள் குண்டர்களை விரட்டியடித்து கூட்டத்தை வெற்றிகரமாக நடத்தினர்.

**தொழிலாளர்களின் உற்சாகம்**

இதனுல் மேலும் ஆத்திரம் கொண்ட நிர்வாகம், பொதுக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கியவரும், சங்கச் செயலாளருமான தோழர் எஸ். மன்னர்சாமி, பாண்டியன் ஆட்டோ சர்வீஸ் தொழிலாளர்கள் ஆர். எஸ். அந்தோணிசாமி, எஸ். பி. கேசவன், வி. கே. கருப்பையா ஆகியோர் மீதும் மார்கசிஸ்ட் கட்சித் தோழர்கள் பன்னீர் செல்வம், சூரியகாந்தி ஆகியோர் மீதும், பில்லப்பன் என்ற தனது கையாள் மூலம் பொய் புகார் கொடுக்கச் செய்தது. பில்லப்பனைத் தாக்கியதாகவும் அதனுல் பில்லப்பனின் கண் கலங்கிப் போய் விட்டதாகவும், மேலும் கம்பெனியின் பெட்ரோல் பங்க்கின் 'ஷோ' ரூம் கண்ணுடிகள் நொறுக்கப்பட்டதாகவும் அந்தப் புகாரில் கூறப்பட்டிருந்தது.

தொழிலாளர்கள் சார்பில் வழக்கறிஞர் ஐ. சிவானந்தம் வாதாடி இந்த வழக்கு பொய்யானது என்று நிரூபிக்கப்பட்டது. எனவே மாஜிஸ்ட்ரேட் வழக்கைத தள்ளுபடி செய்து தொழிற்சங்க, மார்க்சிஸ்ட் கட்சித தோழர்களை விடுதலை செய்தார்.

இதனுல் தொழிலாளர்கள் மத்தியில் உற்சாகம் ஏற்பட்டுள்ளது.

# கண்ணோட்டம்

## அமோக விளைச்சல் உண்மையானால்

# அறுவை சிகிச்சை அவசியமா?

விக்ரமாதித்தன் கதையிலே ஒரு வேதாளம் வரும். பிண உருவத்தில் முருங்கை மரத்தில் தொங்கிக்கொண்டிருந்த வேதாளத்தை, விக்ரமாதித்தன் தன் தோளில் தூக்கிப் போட்டுக்கொண்டு நடந்தானும். புதைக்கக் கொண்டு போனானே என்னவோ......தூக்கிக்கொண்டு நடந்தானும்.

அப்போ வேதாளம் ஒரு விடுகதை போடுமாம். அதற்கு விக்ரமாதித்தன் கரெக்டான ஆன்ஸ்சர் சொல்லிவிடுவானும். உடனே, வேதாளம் பறந்தோடிப் போய் பழைய முருங்கை மரத்தில் தொத்திக்கொள்ளுமாம்.

பாவம். அந்த விக்ரமாதித்தன், தான் நடந்துவந்த தூரம் அத்தனையும் திரும்ப நடந்து, அந்த முருங்கை மரத்தில் போய், வேதாளத்தை இறக்கி தோளில் தூக்கிப் போட்டுகொண்டு, மீண்டும் நடப்பானும்...... வேதாளம் மீண்டும் ஒரு விடுகதை போடுமாம்!

அதற்கும் சரியான பதில் சொல்லி முடித்தவுடனே, மீண்டும் வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிக்கொள்ளுமாம்!

இப்படி எத்தனையோ விடுகதை!... எத்தனையோ பதில்... எத்தனையோ தடவை மீண்டும் வேதாளம் முருங்கை மரம் ஏறிய சங்கதிகள்!...

ஆமாம்! இந்திராகாந்தியின் மத்திய அரசின் போக்கும், 'மீண்டும் வேதாளம முருங்கை மரம் ஏறிய'' கதையாகத்தான் இருக்கிறது.

என்ன என்று கேட்கிறீர்களா? கேளுங்கள்.

அதாவது, நமது நாட்டு மக்களின் உணவுப் பற்றாக்குறையை நிவர்த்திப்பதாகச் சொல்லி— அமெரிக்காவிடமிருந்து பி. எல். 480 அதாவது பப்ளிக் லா (பொதுச் சட்டம்) 480— விதியின் கீழ்— எத்தனையோ ஆண்டுகளாக கோதுமை, மைலோ முதலியன வாங்கி வருகிறோம் அல்லவா! அதற்காக எத்தனையோ கோடி ரூபாய் கொட்டி அழுகிறோம அல்லவா!

விவசாய நாடான நமது நாடு உணவுக்காக கப்பறை ஏந்துவது அசிங்கமாக இருப்பதாகவும— எல்லா ஊர்களிலும் அணைகளைக் கட்டி...... கண்ட கண்ட இடங்களிலெல்லாம வாய்க்கால்களை வெட்டி... பொலி காளை... பொறுக்கு விதை... சீமை உரம்... பூச்சிமருந்து... பம்பு ஷெட்டு... டிராக்டர்கள்... லோனகள்... எல்லாம கொடுத்து பசுமைப் புரட்சி செய்யப் போவதாகவும், பசிப்பிணியை விரட்டப் போவதாகவும...

இப்படியெல்லாம் செய்து,உணவிலே தன்னிறைவு காணப்போவதாகவும, இனிமேல கோதுமை இறக்குமதி செய்யப்போவதில்லை என்றும் சொன்னார்கள.

போனவருடம் பருவமழை நன்றாக இருந்ததால் 11 கோடி டன் அளவுக்கு விளைந்தது.

இதைக்கண்டவுடனே ... ஒரே குதியாய்க் குதித்து இவுக செய்த சாதனைகளாலதான் அமோக விளைச்சல ஆனதாகப் பீத்திக் கொண்டார்கள்.

அதையடுத்து; இதோ, நாங்கள் சொல்லிவந்தபடி பி, எல். 480 கோதுமை இறக்குமதியை நிறுத்திவிட்டோம் என்று 1972 ஜனவரி முதல் நிறுத்தி விட்டார்கள்.

இவர்களா நிறுத்தி விட்டார்களா அல்லது பங்களா தேஷ் விவகாரத்திலே இந்திய அரசு மீது ஏற்பட்ட கடுப்பினால், நிக்சனே நிறுத்தி விட்டானு? என்பது வேறு கதை.

எப்படியோ இருக்கட்டும். கோதுமை இறக்குமதி நின்றுவிட்டது. ரொமப சந்தோஷம்.

ஆனால்......

ஆகஸ்ட் மாதம், அமெரிக்காவிடமிருந்தும், கனடாவிடமிருந்தும், அர்ஜெண்டினாவிடமிருந்தும கோதுமை வாங்குவதற்கு இந்திய சாககா பறககும தட்டுகளை அனுப்பியிருக்கிறது.

89 கோடி ரூபாய்க்கு, 15 லட்சம் டன் கோதுமையையும், உணவு எண்ணெயையும் வாங்கப்போகிறார்களாம.

எப்படி இருக்குது சங்கதி?......

ஆரம்பத்திலேயே சொன்னோம், ''மீண்டும் வேதாளம் முருங்கை மரம ஏறிக் கொண்டது''—என்று......அது இப்ப நடக்குது பார்த்தீர்களா? கோதுமை இறக்குமதி செய்ய மாட்டோமென்று கோவிலிலே சத்தியம பண்ணி விட்டு...இப்ப கப்பல் வருமா, கப்பல் வருமா என்று கரையிலே நின்று பூதக்கண்ணாடி வைத்துப் பார்த்துக்கொண்டிருக்கிறார்களே! இது மீண்டும முருங்கை மரம ஏறுகிற வேதாளம தானே!

ஏ, வேதாளங்களா! எதற்கு இறக்குமதியை மீண்டும் ஆரம்பித்துவிட்டீர்கள? என்று கேட்டால் பற்றாக்குறையைச் சமாளிக்கவும், விலைவாசியை ஸ்திரப்படுத்தவும் பப்பர் ஸ்டாக் வைக்கப்போவதாக கதை விடுகிறார்கள.

தன்னிறைவை எட்டிவிட்டோம், பொன்னிறைவை எட்டிவிட்டோம என்ற பேச்செல்லாம வெறும் மண்ணிறைவாகவே போய்விட்டது.......

இவர்கள் தன்னிறைவு என்று இன்று மாத்திரம் சொல்லவில்லை. பேசக்கற்றுக்கொண்ட நாளிலிருந்தே தான் சொல்லி வருகிறார்கள்.

சுதந்திரம் வந்த புதுசில், பண்டித நேரு, சொன்னார்:

''விண் இடிந்தாலும் சரி! மண் பிளந்தாலும் சரி......உணவு இறக்குமதி செய்யப் போவதில்லை''— என்று கர்ஜித்தார்.

பாவம். பெரிய மனுஷன்தான்......சொன்னதும் நல்லதுதான்......ஆனால், நடக்கத்தான் இல்லை!

1953-ம் ஆண்டில் கூட உணவு உற்பத்தி எக்கச்சக்கமாகப் பெருகிவிட்டதாகவும், வெளி நாடுகளுக்குக் கூட ஏற்றுமதி செய்து அன்னிய நாணயச் செலாவணி சமபாதிக்கப் போவதாகவும, அட அட அடா, எம்மாம் பீத்துப் பீத்தினார்கள தெரியுமா! அது நடந்ததா?...—

இப்பகூட......1972 ஜூலையில்கூட, மத்திய கிழக்கு நாடுகளுக்கு உணவு தானியங்களை இந்தியா ஏற்றுமதி செய்யப்போவதாகக் கூறினார்கள்.

இன்னொரு மந்திரி, ''இந்தியத் தேவை போக, உபரியை பங்களா தேசத்துக்கு அனுப்பப்போகிறோம'' என்றும் டமாரம அடித்தார்.

விவசாய அமைச்சகத்தின் ஒரு நிபுணுதி நிபுணர் சொன்னதுதான், எல்லோரையும் பீட் அடித்து விட்டது.

என்ன சொன்னார் தெரியுங்களா? அந்த வெட்கக் கேட்டையும கேட்டுத் தொலையுங்கள். அவர் சொன்னார்.

''1980-ல் கோதுமை தேவைக்கு மேலே விளைந்து விடும். அதனால் தேக்கம் ஏற்பட்டுவிடும். தேக்கம் ஏற்பட்டுவிட்டால, குடியானவர்களுக்கு இழப்பு ஏற்பட்டு விடும். ஆதலால் இழப்பு ஏற்பட்டுவிடாது இருப்பதற்காக, நாம் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவேண்டியிருக்கும அல்லது மிச்சக் கோதுமையை அழிக்கவேண்டிய நிலைமை ஏற்படும்''— என்று பொன்னான வாய் திறந்து முத்து முத்தா உதிர்த்தார்.

பார்த்தீர்களா வாயக்கொழுப்பை?......

அனைவருக்கும் அன்னமளிக்க இயலாது என்று அறுவை சிகிச்சைக்குப் போட்டி பந்தயம நடத்திக்கொண்டிருக்கும் ஒரு சர்க்காரின் பிரதிநிதி, ''அழித்திடவேண்டிய அளவுக்கு அமோகமாக விளைந்து தள்ளிவிடும்''—என்று எப்படி நெஞ்சாரப் பொய் சொல்லுகிறார் பார்த்தீர்களா?

எதற்காக இப்படி பொய் சொல்லுகிறார்கள் தெரியுங்களா? தங்களுடைய ஆட்சியில் உணவுப் பிரச்னையை தீர்த்து விட்டதாக...ஒரு அபிப்பிராயத்தை உண்டாக்கி மக்களை தன் பக்கம் இழுத்து கொள்ள.....ஒரு வஞ்சக முயற்சி நடக்கிறது.

உண்மையிலேயே உற்பத்தியைப் பெருக்கியிருந்தால்...தன் நிறைவு பெற்று இருந்தால்...

நமது வட்டியில் வந்து விழும் சாப்பாடு, வட்டி நிறைய வந்து விழாதா?...

அரிசி, பருப்பு விலை விறுவிறுனு இறங்காதா?

அறுவை சிகிச்சைக்கு ஆள்பிடித்துவர, அரசு ஊழியர்களையும ஆசிரியப் பெருமக்களையும் அனுப்பவேண்டிய ஜோலி இருக்குமா?...

அமெரிக்க கப்பலை எதிர்நோக்கி, கப்பறை ஏந்தி கடற்கரையில் நிற்கவேண்டிய அவசியமும் இல்லை அல்லவா!

— ஐ. மா. பா.

---

— தி. மு. க.—ஐ. என். டி யூ. சி. தலைவர்களின் துரோகம்!
— முதலாளிக்குச் சாதகமாக தமிழக அரசின் நடவடிக்கை!
— தொழிற்சங்க முன்னணி ஊழியர்களைப் பழிவாங்க சதி!

# விஸ்கோஸ் தொழிலாளர் வீர மிக்க போராட்டம்

சென்ற 30—10—72-ம் தேதி முதல் விஸ்கோஸ் தொழிலாளர்களை வரும் சகல பகுதி மக்களும் பாராட்டத்தக்க விதத்தில் பூரண ஒற்றுமையுடன் நியாயமான போனஸ்கோரி வேலை நிறுத்தம் செய்து வந்தனர் சுமார் 4½ கோடி ரூபாய் மொத்த லாபம் சம்பாதித்துள்ள இககம்பெனி முதலாளிகள், பங்குதாரர்களுக்கு வட்டி, அபிவிருத்தி நிதி, தேய்மான நிதி என்றெல்லாம் லாபம் முழுவதையும் ஒதுக்கி பங்கு போட்டுவிட்டு, தொழிலாளர்களுக்கு நியாயமான போனஸ் தர பிடிவாதமாக மறுத்து வந்தார்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவதற்கு முன், பிரச்சினையைச் சுமுகமாக நேரடியாகப் பேசித் தீர்க்க தொழிலாளர்கள் எடுத்த எல்லா முயற்சிகளும் முதலாளியால் உதாசீனப்படுத்தப்பட்டது. பெரிய முதலாளி வெளி நாட்டுப் பயணம் சென்றிருக்கிறார் என்றெல்லாம் நொண்டிச் சமாதானம் கூறி, பேசி முடிக்காமலேயே தட்டிக்கழித்தனர்.

## முதலாளியின் அலட்சியம்

தீபாவளி நெருங்கியபின் தொழிலாளர்கள் வேறுவழியின்றி வேலை நிறுத்தத்தில் இறங்கினார்கள் நியாயமான முறையில சமரசம் காண தொழிலாளர்கள் முயற்சி எடுத்துபெரியமுதலாளியை நேரில் கண்டு பேசியபோது தொழிலாளர் பிரதிநிதிகளையும், தொழிற்சங்கத் தலைவர்களையும் இந்த முதலாளி கடுமையாகவும், இழிவுபடுத்தும முறையிலும் கேவலமாகப் பேசி, ஒரு மாதச்சம்பளத்திற்கு மேல போனஸ் தர முடியாது என்றும், தொழிலாளர்கள் மீது நடவடிக்கை எடுக்கப் போவதாகவும் மிரட்டிப் பேசியதால் தொழிலாளர் பிரதிநிதிகள் திரும்பி விட்டனர்.

## ஒன்றுபட்ட போராட்டம்

போற்றத்தக்க விதத்தில் தொழிலாளர்கள் அனைவரும் ஒன்றுபட்டு, போராட்டக்குழு அமைத்து, போராட்ட முறைகளையும், குறிக்கோள்களையும் கூட்டாக முடிவெடுத்துப் போராடி வந்த தொழிலாளர்கள், முதலாளியின் தரங்கெட்டப் பேச்சுக்களையும், மிரட்டல்களையும கண்டு அஞ்சாமல், உறுதியாக, நிதானமாக முனனிலும் உறுதியாகப் போராட்டத்தைத தொடர்ந்து நடத்தி வந்தனர்.

## முதலாளியின் சாகசம்

தொழிலாளர்களின்ஒற்றுமையையும். உறுதியையும கண்டமுதலாளி, முதலாளி வர்க்கத்திற்கே உரித்தான தன் சாகசங்களை மேற்கொண்டார். ஒன்றுபட்டு நிற்கும் தொழிலாளர்களை பிளவுபடுத்த அந்த வர்க்கத்திள்ளேயே ஆள் வேண்டுமல்லவா? தொழிலாளர்களில் யாரும்கிடைக்காததால் தொழிற்சங்கத் தலைவர்கள் எனக் கூறிக்கொள்ளும் தி. மு. க. சங்க ஏ. எஸ் மணியும், ஐ. என். டி. யூ. சி. பி எல் சுப்பையன் ஆகிய இருவர் கிடைத்தனர் அவர்கள் மூலம் தன் வேலையை முதலாளி ஆரம்பித்தார்.

## அடிவருடிகளின் வேலை

தொழிலாளர்களை குழப்புவதற்காக இவர்கள் தொழிலாளர்களிடம் வந்து முதலாளி தம் கோரிக்கைகளை தர ஒப்புக் கொள்கிறார் 29 சதம், 30 சதம் வரை கொடுக்க ஏற்றுக் கொள்கிறார். தொழிலாளர் வேலை நிறுத்தத்தைக் கைவிட்டு வேலைக்குச் சென்றதும் கொடுத்து விட ஒப்புக் கொண்டு விட்டார் என்றெல்லாம் ஆசைவார்த்தைகளையும், பசப்பு சொற்களையும் கூறி, தொழிலாளர்களின் போராட்ட உணர்வை மழுங்கடித்து சீர்குலைக்க முயற்சித்தனர், நயமான பசப்பு வார்த்தைகளால் ஏமாற்ற இயலாது என்று கண்ட இத்தலைவர்கள், போராட்டத்தை சாக்கார் தடை செய்ய உள்ளது. பிரச்சினையைக் கோர்ட்டுக்கு விட்டு விடுவார்கள் என்ற மிரட்டல்களையும் தொழிலாளர்களிடம் பகிரங்கமாகவும்,குசு குசுப்பிரச்சாரத்தின் மூலமும் கட்ட விழ்த்துவிட்டனா. பிரச்சாரம எடுபடவில்லை. பிரச்சாரத்தைக் கிளப்பியவர்கள் முகத்தில் கரி பூசிக் கொண்டு திரும்பினர்.

## முதலாளியின் பக்கமேளங்கள்

ஆயினும் அவர்கள் பிரச்சாரத்தைக் கைவிடாது தொடர்ந்து நடத்தியே வந்தனர். ஒரு புரட்சித் தலைவர் தன் சங்கத் தொழிலாளர்களின் கூட்டத்தை தனியாக நடத்தி புளுகுணிப் பிரச்சாரத்தை அவிழ்த்து விட்டார். இன்னொரு தேசியத் தலைவரோ சிறு முகையிலேயே படுக்கையைவிரித்துப் போட்டுக்கொண்டு முதலாளியின் நேர்மை பற்றியும், உதார குணத்தைப் பற்றியும், நியாயமான போனஸ் கொடுக்க ஏற்றுக்கொண்டுள்ளனர், ஒழுங்கு நடவடிக்கைகளை ரத்துசெய்து விட இசைந்துள்ளார். வேலைக்குப் போனதும் எல்லாம் கிடைத்துவிடும் என்ற கிருபானந்தவாரியார் கதா காலட்சேபம் செய்வது போல் செய்துகொண்டே இருந்தார்.நாள் தவறினாலும் தவறும், இருவரும் தனியே தினமும் பெரிய முதலாளியைச் சந்தித்து தங்கள் செயல் திட்டங்களை விளக்கி அறிவுரை பெற்று காணிக்கையையும பெற்று வருவது மட்டும் தவறியதில்லை.

இங்நிலையில்தான் கடந்த 30-11-72-ந் தேதியும்1-12-72ந் தேதியும் சென்னையில் திரு. லேபர் கமிஷனர் முன்பு சமரசப் பேச்சு நடைபெற்றது. கூட்டுபோராட்ட கமிட்டியின ஏகமனதான முடிவு என்று ஒன்றிருந்தாலும்,இத் தலைவர்கள் சென்னை பேச்சு வார்த்தையில் பலகுரல் மன்னர்களாகக் காட்சியளித்து பெரிய முதலாளிக்குப் பக்க மேளம் வாசித்தனர்.

இவற்றிற்கிடையேயும் சென்னைப் பேச்சுவார்த்தையில், ஏற்கனவே இருந்த தேக்கம் தகர்ந்து முன்னேற்றம் தெரிந்தது. இரு தரப்பும் நெருங்கி வந்து உடன்பாடு காணும் சாத்தியக்கூறு தென்பட்டது. லேபர் கமிஷனர் திரு. கமல ரத்னத்தின் ஆலோசனையாக, போனஸ் மொத்தத் 20 சதம் இடைக்காலமாகத் தருவது என்றும் மேலும் பின்னால் 27 சதம் கொடுக்க தான் முயற்சி செய்வதாகவும் கூறினர். தொழிலாளர் தரப்பில், இடைக்காலமாகத் தருவதை மொத்தத்தில் 25 சதமாக கோரினர்.

ஆக உடன்பாடுகாணும் சாத்தியம் தென்பட ஆரம்பித்தது. தொழிலாளர்கள் மீண்டும் பேச அவகாசம் கோரினர். கமிஷனரும் தான் 6—12—72ல் கோவை வருவதாகவும், பேசலாம் என்றும் கூறியிருந்தார்.

## தமிழக அரசின் தொழிலாளர் விரோதப் போக்கு

ஒன்றுபட்டு நின்று போராடிய தொழிலாளர்களுக்கு தொழிற்சங்கத் தலைவர்கள் என்று கூறிக்கொண்ட சிலர் செய்த இடையூறுகளும தொல்லைகளும், சீர்குலைவு நடவடிக்கைகளுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போல் 6-12-72ல் தமிழ்நாடு அரசின் தலையீடு வந்தது. உடன்பாடுக்கான சாத்தியக் கூறுகள் தென்பட்ட சமயத்தில், சமரசப் பேச்சு முறியாத தோல்வியுருத நிலையில் தி மு கஅரசு பிரச்னைய தொழில் டிரிபூனலுக்கு விட்டு, வேலை நிறுத்தத்தை தடை செய்து உத்தரவு பிறப்பித்துள்ளது. அப்பட்டமான முதலாளி ஆதரவு நடவடிக்கையாகும் தொழிற்சங்கப்பிரதிநிதிகள் பெரிய முதலாளியைச் சந்தித்துப்பேசியபோது அவர் மிரட்டியதும், சென்னையில் எல்லோரையும் பார்த்துப் பேசி முடித்துக் கொண்டு வந்துள்ளேன் என்று கூறிய பொழுது தொழிலாளர் மனதில் எழுந்த சந்தேகம் ஊர்ஜிதப்படுத்துவதாக உள்ளது. இதே முதலாளிக்குத்தான், மெட்ராஸ் அலுமினியம் கம்பெனிக்கு தமிழக அரசு மின் சப்ளை செய்வதில் ஒரு கோடி ரூபாய்க்கு ஆதாயம் கிடைக்கும் முறையில் குறைத்துக் கட்டணம் விதித்துள்ளதும் நாடறிந்த உண்மை.

## தி.மு.க., ஐ.என்.டி.யூ.சி. தலைமையின் துரோகம்

நியாயமான கோரிக்கைகளுக்காகத் தொழிலாளர்கள் அனைவரும் ஒன்றுபட்டுப் போராடுகையில், முதலாளிக்குச் சாதகமாக அரசு போராட்டத்தைத் தடைசெய்து தலையிட்டது நியாயமற்ற நடவடிக்கையாகும். உண்மையில், தொழிலாளர்களின் கோரிக்கை நியாயமானது என்பதை இத்தலைவர்கள் ஏற்றுக்கொள்பவர்களாக இருந்தால், சிம்சன் தொழிலாளர்களைப்போல், நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலைத் தொழிலாளர்களைப் போல் வேலை நிறுத்தத்தைத் தொடர்ந்து நடத்த அறைகூவல் விட்டிருக்க வேண்டும்.

அதற்குப் பதில் போராடும் தொழிலாளர்களின் முதுகில் குத்தியதுபோல், கூட்டத்தைப்போட்டு தாங்களே தலைமை தாங்கி தொழிலாளர்களை வேலைக்குப் போகச்சொல்லி, ஒன்றுபட்டுப் போராடிய தொழிலாளர்களுக்குத் துரோகமிழைத்துள்ளனர். சஸ்பெண்டு செய்யப்பட்டு வெளியில் நிற்கும் தொழிலாளர்களுக்கு எவ்வித உத்திரவாதமுமில்லை! முதலாளி எழுதிக்கொடுத்த அடிமைச் சாசனத்தில் கையொப்பமிட்டு வேலைக்கு போகவும் அறிவுரை வழங்கிவிட்டனர்.

தொழிலாளத் தோழர்களே! போராடிய தொழிலாளர்களுக்கிழைத்த துயரம் இத்துடன் முடிந்துவிடவில்லை. அமைச்சரைக்கண்டு பேசியுள்ளனராம்! 12 (3) ஒப்பந்தம் போடப்போகிறார்களாம். குதிரை கீழே தள்ளியது மல்லாமல் குழியையும் பரித்ததாம் என்பதுபோல. இவ்வளவையும் செய்துவிட்ட இத்தலைவர்கள் போனஸ் குறித்து ஒப்பந்தமும் செய்ய உள்ளனராம். ஏன் இந்த ஒப்பந்தம் செய்ய உள்ளனர்? மீண்டும்தொழிலாளர்கள் தங்களது நியாயமான கோரிக்கைக்கு ஒன்றுபட்டுப் போராட முன் வந்து விட்டால் ஆபத்தல்லவா? எனவேதான் முதலாளியின் முகங்கோணாத ஒரு ஒப்பந்தத்தைச் செய்து முடிக்க முனைந்துவிட்டனர்

## உணரும் நாள் வெகுதூரமில்லை

அது மட்டுமல்ல; இப்போராட்டத்தில் தொழிலாளர்களை ஓரணியில் திரட்டி போராட பாடுபட்ட சி. ஐ. டி. யூ சங்க தொழிலாளர்களுக்கு எதையும் செய்ய முடியவில்லை என்று கூறாமல் கூறுவதற்கும் இந்த ஏற்பாட்டைச் செய்ய முனைந்துள்ளனர். இந்த முயற்சி கானல் நீராகும் என்பதை தொழிலாளர்களே அவர்களுக்குணர்த்தும் நாள் வெகுதூரத்தில் இல்லை.

---

# ஏஜண்டு தோழர்களின் கவனத்துக்கு

மாநில செயற்குழுவின் முடிவுப்படி ஏஜண்டுகள் தற்போது பெற்றுக் கொண்டிருக்கும் பிரதிகளுக்கு உள்ள டெப்பாசிட்டை ஜனவரி 31-ந் தேதிக்குள் ரூ. 4·50 உயர்த்த வேண்டுமென்பது தெரிந்ததே.

எனவே இப்போதிருந்தே டெப்பாசிட் தொகையை படிப்படியாக உயர்த்தி ஜனவரி 31-க்குள் ரூ. 4-50 ஆக உயர்த்தக் கேட்டுக் கொள்கிறோம்.

ஒரே தவணையில் உயர்த்துவது ஏஜண்டுத் தோழர்களுக்கு சிரமமாக இருக்கலாம். எனவே தான் இந்த வேண்டுகோள்.

நிர்வாகி,
தீக்கதிர்.

---

# வெள்ளத்தால் ஆத்தூர் தாலுகா அடைந்த சேதங்கள்

ஆத்தூர் டிச. 12—

ஆத்தூர தாலுகாவில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு நஷ்டஈடு மானியத்துடன் கூடியகடன் வழங்கக்கோரி தமிழ்நாடு விவசாயிகள் சங்க சேலம் மாவட்ட செயலாளர்தோழர் பி. தர்மலிங்கம புயலால் சேதமடைந்த விபரங்களை முதலமைச்சருக்கு கடிதம் அனுப்பியுள்ளார்.

## விவசாயிகளுக்கு ஏற்பட்ட நஷ்டம்

புயலாலும், கனத்தமழையாலும, தண்ணீர்வெள்ளப் பெருக்காலும் இதுவரை சேலம் மாவட்டம் கண்டிராத அளவிற்கு 8--12--72--ல் தண்ணீர் பெருக்கெடுத்து ஓடியதால் ஆத்தூர் தாலுகாவில் ராமநாயக்கன் பாளையம் வடக்கு பகுதியிலும், காட்டுக்கோட்டை வடக்கு பகுதியிலும் நூற்றுக்கணக்கான ஏழை விவசாயிகள் தாழ்த்தப்பட்ட ஏழை விவசாயிகளின் ரூ 500 முதல் ரூ 6000 மதிப்புள்ள நெல், குச்சி கிழங்கு, கரும்பு போன்ற பயிர்கள் தண்ணீரில்அடித்துச்செல்லப்பட்டு பெரும நட்டத்திற்கு ஆளாகியுள்ளார்கள். இத்துடன் அவர்களின் நிலங்களை பள்ளமாகவும் மேடாகவும், ஓடையாகவும், கற்களை நிரப்பியும் விவசாயம் செய்ய முடியாதவகையில்பாழாக்கியுள்ளதுடன், அவர்களின் கிணறுகளை இடித்தும் மூடியும் பாழ்படுத்தியுள்ளது. அவர்களின் குடியிருப்பு மனைகளும் இடிந்து பரிதாபகரமான நிலையில் உள்ளார்கள்.

## துன்பத்தில் மூழ்கியுள்ள அரிஜனங்கள்

பெத்தநாயக்கன் பாளையம், கல்பகதூர் நரசிங்கபுரம அப்பமசமுத்திரம், ஆத்தூர் முல்லைவாடி, அம்மம பாளையம், காட்டுக் கோட்டை தலைவாசல், பட்டுத்துறை போன்ற பல கிராமங்களில் வீடுகள் இடிந்து ஏழை அரிஜன குடும்பங்கள் பெரிதும் பாதிக்கப்பட்டு குடியிருக்க இடமின்றியும் உண்ண உணவின்றியும் துன்பத்தில் மூழ்கியுள்ளார்கள்.

நடை பாதைகளும் நாசப்படுத்தப்பட்டும் ஏரிகள், பாலங்கள் உடைத்தும் பெரும் நட்டங்கள் உண்டாகியுள்ளன. உடனடியாக தாங்கள் தயவு செய்து நேரில் வந்து பார்த்து வீடு இழந்தவர்களுக்கு புதிய வீடுகள் கட்டிக் கொள்ள போதுமான நிதி வழங்கி வேண்டும்.

## நிவாரண உதவி அளித்திடுக

தனது விளைச்சல் பயிர்களையும, மகசூல்களையும், இழந்து தவிக்கும் ஏழை விவசாயிகளின் பொருள்களுக்கு ஏற்ற வகையில் நட்ட ஈடும், வெள்ள நிவாரண நிதி வழங்கிட வேண்டும்.

அவர்களின் நிலங்களும், கிணறுகளும் நாசப்படுத்தப்பட்டதை சீர்திருத்தம் செய்ய எவ்வித நிபந்தனையுமற்ற மான்யத்துடன் கூடிய நீண்டகால தவணை கடன் வழங்கியும், அவர்களுக்கு உதவுமாறு தனது கடிதத்தில் கூறியுள்ளார். இதே விபரங்களடங்கிய மனு ஆத்தூர் வந்த கவர்னர் கே. கே. ஷாவிடமும் கொடுக்கப்பட்டது

---

## நடக்க இருப்பவை

**திருச்சி பீமநகர்**
கூனிபஜாரில்
பொதுக்கூட்டம்
19-12-72 மாலை 7 மணிக்கு
தோழர்கள் :
**ஆர். ரமணி**
**மதுரை நன்மாறன்**
பேசுவர்.

---

# இந்திய கம்யூனிஸ்ட்கட்சி(மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு கட்டிட நிதி

| | |
|---|---|
| முன் வசூல் | 1433—73 |
| திருவந்தியம். மு. மாசிலாமணி—சுசீலா திருமணத்தை யொட்டி | 5—00 |
| தினைகாத்தான்வயல் மு. வேலு | 10—00 |
| நெல்லை மின்சார ஊழியர்கள் | 7—25 |
| நெல்லை ஆசிரியர் கூட்டணி | 1—00 |
| மேலாநீலிதநல்லூர் தி. இளையபெருமாள் ராமாத்தாள் திருமணத்தை ஒட்டி | 10—00 |
| தோழர் பி. வி. துரைராஜ் முதல்தவணை | 1000—00 |
| கோவை சிவலால் முலம் சமையல் சப்ளை தொழிலாளர்கள் | 5—00 |
| மதுரை சாவித்திரிக்கும், கருப்பையாவுக்கும் தோழர் கே. முத்தையா தலைமையில் நடந்த திருமணத்தை யொட்டி | 10—00 |
| கோவை பிரஸ்காலனி அனுதாபிகள் | 40—00 |
| ஆலத்தாம்பாடி பிச்சைக்கண்ணு குழந்தைக்கு செங்கொடி என பெயரிட்டதை யொட்டி | 2—00 |
| ஆலத்தாம்பாடி பொன்னுசாமி | 5—00 |
| சத்திரப்பட்டி வி. ஆர். பழனிச்சாமி செல்லம்மாள் திருமணத்தை யொட்டி | 10—00 |
| உதயத்தூர் எஸ். அழகியநாபி வேலம்மாள் திருமணத்தை ஒட்டி | 5—00 |
| திண்டுக்கல் நகர் கமிட்டி | 750—00 |
| திருப்புவனம் கே. தங்கச்சாமி ஆறுமுகத்தம்மாள் திருமணத்தை ஒட்டி | 2—00 |
| மதுரை 41-வது வார்டு தங்கவேலு பஞ்சவர்ணம் திருமணத்தை ஒட்டி | 5—00 |
| நிலக்கோட்டை தாலுகா கே. இடும்பன் சிவகாமி திருமணத்தை ஒட்டி | 3—00 |
| நிலக்கோட்டை தாலுகா எஸ். முத்துசாமி கண்மணியம்மாள் திருமணத்தை ஒட்டி | 3—00 |
| புதுக்கோட்டை கே. ஆர். ஸ்ரீதரன்.தேவகி திருமணத்தை ஒட்டி | 5—00 |
| மதுரை ராஜேஸ்வரி மில் மூக்கையா மக்களின் திருமணங்களை ஒட்டி | 5—00 |
| பரமக்குடி கிளை | 75—00 |
| தேவரப்பன்பட்டி பழனிச்சாமி பாப்பாத்தி திருமணத்தை ஒட்டி | 5—00 |
| நெல்லை மாவட்டக் குழு | 10—00 |
| காஞ்சி தோழர் கே. எஸ், பி, அவர்களின் மகள் நீலாவிற்கும் மோகனரங்கனுக்கும் கே. எஸ். பி. அவர்களின் தம்பி மகள் புனிதவதிக்கும். எஸ். வி. ராமச்சந்திரனுக்கும சென்னை ஜி. க. செயலாளர் பி. ஆர். பரமேஸ்வரன் தலைமையில்நடந்த திருமணத்தை ஒட்டி | 20—00 |
| கோவை காந்திபுரம் சீனிவாசராவ் மன்றம் | 20—00 |
| கோவை 13-வது வார்டு என். சுப்ரமணியம் | 5—00 |
| கோவை என். வெங்கிடு மகன் திருமணத்தை ஒட்டி | 5—00 |
| மொத்த வசூல் | ரூ. 3456—98 |

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (13-முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர்: கே. முத்தையா.